KALKI 5.12.93

ரூ. 3.00

# கல்கி

# ஆஹா, டீ-ஷர்ட்ஸ்!



விநோத் காம்ப்ளி : சக்ஸஸ் ஸ்டோரி





# தேர்தலில் சிரிப்பு அலை!

●● ராஜஸ்தான் மாநிலம் கங்காபூர் தொகுதியில் தேர்தல் நடந்து முடிந்து, ஓட்டுப் பெட்டிக்கு 'சீல்' வைத்த பிறகு, தமது வேட்பாளர் மிகக் குறைந்த ஓட்டுக்களையே பெற்றிருக்கிறார் என்பதை உணர்ந்து கொண்ட அவரது ஏஜெண்ட், மற்ற அதிகாரிகள் சற்றே அசந்து இருந்த வேளையில், பெட்டியைத் தூக்கிக் கொண்டு குடுகுடு வென ஓடி, அதைக் கிணற்றுக்குள் எறிந்து விட்டார்! சுற்றியுள்ளோர் விழித்துக் கொண்டு அவரைத் தடுப்பதற்குள் சம்பவம் நடந்து முடிந்து விட்டது. அந்த ஒரு ஓட்டுச் சாவடியில் மட்டும் மறு தேர்தல்!



●● மத்தியப் பிரதேசம் போஜ்பூர் தொகுதியில் நாலு வகை பழங்குடியினர் வசிக்கின்றனர். இங்கு முன்னாள் முதல் மந்திரி சுந்தர்லால் பட்வாவும் (பி.ஜே.பி.) அர்ஜுன் சிங்கின் மகன் அஜய்சிங்கும் போட்டியிட்டனர். 'யாருக்கு உங்கள் வோட்டு?' என்று கேட்டால் 'பரா தேவ்' (பெருங் கடவுள்) தான் முடிவெடுத்துத் தெரிவிப்பார் என்றார்கள் இந்தப் பழங்குடியினர். கடவுள் அவர்களுக்குத் தமது முடிவை எப்படித் தெரிவித்தார் என்பது இதுவரை மர்மமாகவே இருக்கிறது!

●● ஜனதா தளத்தின் தலைவர் அஜித் சிங், பி.ஜே.பி. கட்சிக்கு ஒரு புதுப் பெயரைக் கொடுத்திருக்கிறார். ''பாகோ, ஜனதா பீடேகி'' (ஓடுங்கள், பொது மக்கள் உங்களை அடிக்கப் போகிறார்கள்) என்பதே அது!

●● 'பி.ஜே.பி. கட்சிக்காரர்கள் ம.பி. மாநிலத்தில், பொது மக்கள் பணத்தை ஏராளமாகச் சுருட்டி விட்டார்கள்' என்ற அர்ஜுன் சிங்கின் குற்றச்சாட்டுக்கு அம்மாநில பி.ஜே.பி. கட்சியின் தலைவரான லக்கிராம் அகர்வால், 'எனது மனைவியையும், கட்சியையும் தவிர மற்ற எல்லாவற்றையும் அர்ஜுன் சிங்கின் சொத்துக்களோடு மாற்றம் செய்து கொள்ள நான் தயார்; அர்ஜுன் சிங் தயாரா?'' என்று கேட்டிருக்கிறார்.




●● மத்தியப் பிரதேசம், பிபாரியா தொகுதியைச் சேர்ந்த பி.ஜே.பி. வேட்பாளர், வில், அம்புகளோடு ராமருக்கு ஒரு பெரிய 'கட்-அவுட்' செய்து வைத்தார். அப்புறம் தான், ஒரு எதிர்க்கட்சி வேட்பாளரின் சின்னம் வில்லும், அம்பும் என்பது அவருக்கு நினைவு வந்தது! சிரமப்பட்டு உருவாக்கி வைத்த 'கட்-அவுட்'டை அவசரம் அவசரமாக அப்புறப்படுத்தினார்.



●● ம.பி. கைராகர் சட்டமன்றத் தொகுதியில் அரச குடும்பத்தைச் சேர்ந்த ராணி ராஷ்மி தேவி ஒரு வேட்பாளர். இவரை எதிர்த்துப் போட்டியிடுவது அவர்கள் வீட்டுச் சமையல்காரரான புதாரி சிங் யாதவ்! இவர், இத்தொகுதி எம்.பியின் மகனுடைய ஆதரவைப் பெற்று களத்தில் இறங்கியிருக்கிறார். எம்.பியோ ராணியின் மைத்துனர்! அரச குடும்பத்தினர் நேரடியாகப் போட்டியிடாமல் வேலைக்காரர்கள், சமையற்காரர்கள் மூலம் 'ப்ராக்ஸி' யுத்தம் நடத்துவது இங்கு சர்வ சாதாரணம்!

– ராஜீவி நரசிம்மன்

# மழையோடு மல்யுத்தம்!

பாப்பையா பக்கம்

மழை! கன மழை! பேய் மழை!

நகர வீதிகள், வெள்ளம் நகர மறுக்கும் வீதிகளாகி விட்டன. வீட்டுப் படி ஏறி, முற்றத்தைக் கடந்து, வீடு முழுமையையும் மூக்கி, உருப்படிகளை உருட்டித் தள்ளி வீதிக்குக் கொண்டு வந்து உதைபந்து விளையாட்டு நடத்தி விட்டது! நகரத்தைச் சுற்றி எழுந்த புதிய இல்லங்களின் வாசல்களை அடைத்துக் கொண்டு ''யாருய்யா உள்ளே! வெளியே வாய்யா!

''என்னமோ தண்ணியே இல்லை, தண் ணியே இல்லைன்னு தாறு மாறாக் கத்தின யாமே, என்னை இல்லைன்னு நீ எப் படிய்யா சொல்லலாம்?

''நீதான், நான் உன் ஊருக்கே வரக் கூடா துன்னு என் குடியிருப்புக் குளங்களை எல் லாம் போட்டி போட்டு மூடிட்டே. ஆனா ளுக்கு என் வாயிலே மண்ணைப் போட்டு, என் நெஞ்சிலே கம்பக் குத்தி உன் வெற்றிக் கொடிய ஏத்திட்ட; என் உடம்பெல்லாம் கூறு போட்டு யார் யாரோ லாபம் சம்பா திக்க விட்டுட்ட; இவ்வள வையும் செஞ்சிட்டு என்னை இல்லைன்னு சொல்ல உனக்கு எவ்வளவு தைரியம் இருக்கணும்?

''இத்தோட விட் டயா? என்னப் பெத்தவ ளாட்டம் இலையை எல்லாம் ஆட்டி வர வேற்பாளே, அந்த மரங்களை எல்லாம் சுற்றுயிருங் கொலையு சிருமாக் கொன்னு நீத்துப் புட்டே;

''உனக்குப் பயந்து தானய்யா ஊருக்கு வெளியிலயும், காட்டிலயும், மலையிலயும் குடியிருந் தோம். அது கூடப் பொறுக்கலையே உனக்கு!

''எதையும் பேத்து மாத்துப் பண்ற வாய் உனக்கு!

''எதையுமே பேச முடியாத வாய் எங்களுக்கு!

''சரி! நம்மை வேண்டாம்னு சொல்ற வங்க வாசலை மிதிப்பது கூடக் குத்தமின்னு உன் நினைக்கே வராம இருந்தா நீ சும்மா இருக்கணுமில்ல; தண்ணியே இல்லைன்னு என்னைக் கேவலமாய்ப் பேசலாமா?

எங்கே, வெளியே வா; நான் இருக் கேனா இல்லையான்னு பாத்திடலாம்'' - என்று பேசி வைத்துக் கொண்டது போல் ஊரைச் சுத்தி இருந்த கண்மாய்களை உடைத்துக் கொண்டு, தன் குடியிருப்பில் இருந்த ஆக்கிரமிப்புகளை மோதி இடித்து, முகாரி பாட வைத்து விட்டது! ரோடுகளா, சொல்ல வேண்டாம்! இந்த நேரம் பார்த்து அவை கிளர்ச்சி செய்ய ஆரம்பித்தன.

''பொருக்கு ஊற்றியிருந்த தாரைப் பிளந்து கொண்டு சல்லிக் கற்கள் சண்டித்தனம் செய்தன. இரு சக்கர வண்டிகளை இடறி உருட்டி விட்டன. அலங்காரமாக வந்த வண்டி களைத் தன் நெஞ்சுக் குழியில் இறக்கி நிறுத்தி அலங்கோலமாக ஆக்கி விட்டன. 'ஆடை இல்லாமக் கிடக்குற என் மேல செருப்புப் போட்டா மிதிக்கிற?' என்று செருப்பை அத்துக் கையில் எடுக்க வைத்தன. வெறுங் காலோடு இறங்கினால் ஈரக் கால்களைக் கூரிய கற்கள் கீறிப் பார்த்து 'இது எப்படி இருக்கு' என்று கேட்டன.





''அவுக அவுக சம்பளத்தை மட்டும் நயா பைசா சுத்தமாக் கணக்குப் பாத்து வாங்கிக்கிட்டுப் போறீகளே, எனக்குன்னு ஒதுக்குற பணம் மட்டும் என்ன ஆச்சின்னு பாத்தீகளா; இல்லை கேட்டீங்களா?

''மிதிக்கிறது, நடக்குறது, ஓடுறது, ஓட்டுறது எல்லாம் என் மேல; ஆனா எனக்கு என்ன ஆச்சினு யாராச்சும் கவலைப் பட்டீங்களா?

''எனக்குன்னு ரொம்பத் தாராளமாச் சொல்றது; அதுல 60, 70 சதம் பங்கு போட்டுக்கிடுறது!

''இப்படி என் துட்ட எல்லாம் கொள்ளை அடிச்சீங்களே, உங்களைச் சும்மா விடலாமா? வாங்க, இப்ப என் மேல நடந்து பாருங்க'' - என்று வீதி எல்லாம் கலவரம் செய்து ''ரோடு மறியல்'' நடத்தி விட்டன!

''உங்க கதியே இப்படின்னா, நாங்க சாக்கடைக் கழிசடைகள்; எங்களை யார் மதிப்பாங்க'' - என்ற ரோட்டோர வாய்க்கால்கள் ரோட்டுத் தண்ணீரை வீட்டிற்குள் கூட்டி வந்து, ''எவ்வளவோ நாள் உங்களுக் காக உழைச்சிருக்கேன்; இப்ப ஓங்களோட ஒண்டுக் குடித்தனம் செய்ய எனக்குக் கொஞ்சம் இடம் கொடுங்க'' என்று என் னைக் கேட்காமலேயே பின்பக்கத்தை அடைத்துக் கொண்டு நின்று விட்டன!

மின்சாரமா? அது வரும், போகும்! என்னைப் பார்த்துக் கண் சிமிட்டிச் சிரிக்கிறதா, கைகொட்டி நகைக்கிறதா என்று சொல்ல முடியாதபடி ஒளிந்து, ஒளிந்து கண்ணாமூச்சி விளையாடியது.

நாக்கும் சுவை மறந்து நாளாகி விட்டது. இந்தத் தக்காளிக்கு வந்த மவுசைப் பாருங்களேன்! கிலோ ஐம்பது ரூபாயாம்; பஞ்சாரத்துக்குள் அடைபட்ட கோழிகளாய் முடங்கி விட்டோம்!

குடையைத் தேடினால் அது எலிக்குத் தன் மேனியைக் கொடை கொடுத்து விட்டு எலும்பைக் காட்டியது. செருப்பைப் போட வும் பயம்; போடாமல் வீதியில் இறங்கவும் பயம்; வெளியே எப்படிப் போவது?

ஒரு வழியாக பஸ் ஸ்டாப்பிற்கு வருகிறேன். திருவிழாக் கூட்டம்! எல்லா அலுவலகங்களும் எல்லாப் பள்ளி, கல்லூரிகளும் ஒரே நேரத்தில் பணியைத் தொடங்கினால் பிறகு கூட்ட நெரிசலுக்குச் சொல் லவா வேண்டும்! பணி நேரத்தில் மாற்றங்கள் செய்யக் கூடாதோ?

பத்து ரூபாய்! கஷ்டந்தான்; மூணுநாள் காப்பியைக் கட் பண்ணிடலாம் என்று ஆட்டோவை அழைத்தால் அவர், ''எத்தனைப் பேரு சார்? இன்னும் இரண்டு பேரைக் கூட்டிக்கிட்டு வாங்க; ஆளுக்கு இருபத்தைஞ்சு ரூபாய் தரணும்'' என்று அவர் வண்டிக்கு என்னைத் தரகராகவும் பயணியாகவும் இருக்கச் சொல்கிறார்! இன்னும் இரண்டு பேர் வேண்டும் என்றதில் எனக்கு வருத்தம் இல்லை; ஜன சந்தடியைக் குறைக்க அது உதவும் தானே! ஆனால் பத்து ரூபாயை இருபத்தைந்தாக்கி ஒரு நவீன வழிப்பறியைத் தொடங்குகிறாரே, அதை எண்ணியதுந்தான் இதயம் கலங்க ஆரம்பித்தது. ஆமாம்! அவரைப் பற்றிய அக்கறை இல்லாத சமூகத்தின் மீது அவருக்கு மட்டும் எப்படிச் சமூகப் பொறுப்பு என்பது வரும்?

மூன்று நாள் மழைக்கே இந்த மக்களின் மன நிலை இப்படி என்றால் நில நடுக்கமோ, படை எடுப்போ நேர்ந்து விட்டால்...? வரட்டும்; அதற்கொரு கமிஷன் அமைத்தால் போகிறது...!

– சாலமன் பாப்பையா.




● விடுதலையின் சின்னம்...

பதற்கான தகுதியையும் பெற்று விட்டது.

அமெரிக்கக் கடற்படைக்கு கை வைத்த உள்பனியனாக அறிமுகமாயிற்று டீ ஷர்ட். மாலுமிகள் கடினமாக உழைக்கும் போது கனமான சட்டை அணிய விரும்பவில்லை. சட்டையைக் கழற்றி விட்டாலோ, ஏதோ உள்ளாடையுடன் வேலை செய்வது போலிருந்தது. எனவேதான் கை வைத்த உள்பனியனாக அறிமுகமாயிற்று, டீ ஷர்ட்.

மாலுமிகளிடமிருந்து விளையாட்டு வீரர்கள் டீ ஷர்ட்டின் மகிமையைப் புரிந்து கொண்டார்கள். அவர்கள் அணிய ஆரம்பித்த



ஆஹா





**ச**ம்பிரதாயமாக இல்லாமல் அலட்சியமாக, கேஷுவலாக அணிந்து கொண்டது போல் இருக்க வேண்டும்; மிருதுவாக, இலேசாக உடம்பில் அமர வேண்டும்; எல்லாவற்றையும் விட முக்கியம் - கவனத்தைக் கவர்ந்து நின்று பார்க்கச் செய்ய வேண்டும் - இதுதான் டீ ஷர்ட்டின் இலக்கியம். இவை தவிர டீ ஷர்ட்டுகள் உடல் வலிமையையும் உணர்த்துகின்றன. அது இல்லாதவர்களிடம் கூட இருப்பது போன்ற தோற்றத்தை உருவாக்குகின்றன.

டீ ஷர்ட்டுக்கு இன்று வயது நூற்றி நாலு என்று கணக்குப் போட்டிருக்கிறார்கள். எந்த உடுப்பும் புகழ் பெறவே சில காலம் ஆகும்; அதன் பின் மாறி விடும். ஃபேஷனுக்கு ஏற்ப அது நிலைக்கும் அல்லது மடியும். ஆனால் டீ ஷர்ட் மட்டும் தோன்றும் போதே புகழுடன் தோன்றி நிலைத்து நிற்



பிறகு இது மேலும் பிரபலமடைந்தது.

மற்றொரு பெரிய திருப்பம் உலக யுத்தத்தின் போது பேர்ல் ஹார்பர் தாக்கப்பட்டதும் ஏற்பட்டது. அன்று முதல் பல லட்சம் பேர் முப்படைகளிலும் அமெரிக்காவில் சேர்த்துக் கொள்ளப்பட்டார்கள். அவசரத்துக்கு அத்தனை பேருக்கும் முதலில் டீ ஷர்ட்டுகள்தாம் தரப்பட்டன.

யுத்தம் முடிந்து ராணுவ வீரர்கள் வீடு திரும்பிய பிறகும் வசதி காரணமாக சட்டையின்றி டீ ஷர்ட்டுகளை மட்டுமே அணிய ஆரம்பித்தனர். ஆனாலும் அப்போதும் டீ ஷர்ட் ஒரு மரியாதைக்குரிய உடையாகக் கருதப்படவில்லை.

கிளார்க் கேபிளும் மார்லன் பிராண்டோவும் டீ ஷர்ட்டுகளை சினிமாவில் அணிந்து கொண்டு அதற்கு ஒரு கௌரவத்தை அளித்தார்கள். டீ ஷர்ட் ஒரு சூப்பர் ஸ்டார் ஆகிவிட்டது.

டீ ஷர்ட்டுகளை விளம்பரத்துக்குப் பயன்படுத்தலாம் என்ற எண்ணமும் முதலில் சினிமாத் துறையினருக்குத்தான் ஏற்பட்டது. அவ்வாறு முதலில் விளம்பரப் படுத்தப்பட்ட படம் The Wizard of Oz.



# டீ-ஷர்ட்ஸ்!





பாப் பாடகர்களும் ராக் பாடகர்களும் டீ ஷர்ட்டுகளை அணிந்து அதனை மேலும் பிரபலப்படுத்தினர். அதன் புகழ் மங்குவது போல் தோன்றும் சமயம் ஒரு பிரபல பாடகர் அல்லது நடிகர் அணியப் போக, மறுபடி மார்க்கெட் சூடு பிடிக்கும்.

இன்று டீ ஷர்ட் புகுந்து புறப்படாத இடமே இல்லை. ரிக்ஷாக்காரன் படத்தில் தொடங்கி சமீபத்திய குணா, தளபதி வரை டீ ஷர்ட் நமது திரை உலகையும் ஆக்கிரமித்துக் கொண்டது. ஆக்ஷன் ஹீரோவுக்கும் டீ ஷர்ட்தான்; கலகலவுக்கும் அதுதான்; சோகத்துக்கும் அதுவே!

டீ ஷர்ட்டுகள் ஒருவரது ஓவியத் திறனைக் காண்பிக்கவும் பயன்படுகிறது. மாடர்ன் ஆர்ட்டும் மரபு ஓவியமும் டீ ஷர்ட்டுகளில் அமர்க்களப்படுகின்றன. சிகப்பு, கறுப்பு, வெள்ளை என்று டீ ஷர்ட்களை வாங்கி, தாங்களாகவே தங்கள் கற்பனையையும் ஓவியத் திறனையும் பயன்



* பிய்த்துக் கொண்டு போகிறது...!



* சதானந்த்

படுத்தி, டிராகன் (யாளி) முதல் ஆப்பிள் வரை வண்ணப்படங்கள் வரைகின்றனர். அத்துடன் வாசகங்களும் (சுலோகன்) இணைகின்றன.

படம் இல்லாமல் வாசகங்கள் மட்டும் உடைய டீ ஷர்ட்களும் உண்டு. சமாதான ஓட்டமா, எதிப்புப் பேரணியா, சுற்றுச் சூழல் பாதுகாப்பா எல்லாவற்றுக்கும் பிரசார வாசகங்கள் உண்டு. பிரபலப்படுத்த டீ ஷர்ட்களும் இருக்கின்றன.

விளம்பரம் இல்லாமல் கிண்டல் வாசகங்கள் பற்றியோ, கேட்கவே வேண்டாம். அவரவர் கற்பனைத் திறனுக்குச் (அல்லது சில சமயம் ஆபாச சிந்தனைக்கு) சவால் விடுகின்றன டீ ஷர்ட்டுகள்!

**ந**வயுகப் பெண்மணிகளுக்கு டீ ஷர்ட் இன்றியமையாததாகி விட்டது. அது பெண் விடுதலையின் ஒரு சின்னம் போலாகி ஓர் அந்தஸ்தையும் அடைந்து விட்டது.

இந்தியாவில் டீ ஷர்ட்டுகளின் உற்பத்தி தொடங்கி நீண்ட காலமாகி விட்டாலும் ஏற்றுமதி கருதி உலகத் தரத்துக்கு ஈடாகத் தயாரிக்கும் உணர்வு சமீப காலத்தில்தான் ஏற்பட்டிருக்கிறது. திருப்பூர் இதில் தேன் கூடு.

பின்னலாடைகளுக்குப் பெயர்போன இந்நகரம், டீ - ஷர்ட்டுகளை முதன் முதலில் ஏற்றுமதி செய்ய ஆரம்பித்தது 1969 வாக்கில். அப்போது ஆர்டர்கள் இடைத்தரகர்கள் மூலம் வந்தன. இப்போதோ சின்னச் சின்ன நிறுவனங்கள் கூட தாங்களே டிசைன் செய்து டீ ஷர்ட்கள் உருவாக்கி ஏற்றுமதி செய்கின்றன.

தூய பருத்தியிலும், செயற்கை இழைப் பருத்தியிலும் திருப்பூர்க்காரர்கள் உருவாக்கிய டீ ஷர்ட்டுகள், சென்ற ஆண்டு 773 கோடி ரூபாய் மதிப்புக்கு ஏற்றுமதியாகியுள்ளன! இந்த ஆண்டின் முதல் ஏழு மாதங்களில் மட்டுமே 823.46 கோடி ரூபாய்க்கு ஏற்றுமதியாகியுள்ளன! இந்தியாவின் மொத்த ஏற்றுமதியில் 85 சதவிகிதம் திருப்பூரிலிருந்துதான்! தூய பருத்தி தயாரிப்புகளில் லாபம் அதிகம்.

இந்த கறுகறுப்பான வளர்ச்சிக்குக் காரணம் அயல்நாட்டின் கேட்டதைக் கேட்டபடி டிசைன் செய்வதும் தரக்கட்டுப்பாட்டைச் சிறிதும் தளர்த்தாததும்.

**ப**ல நிறுவனங்கள் தனித்தும் அயல் நாட்டு நிறுவனங்களுடன் இணைந்தும் டீ ஷர்ட்டுகள் தயாரிக்கின்றன. பிரபலமான ஒன்று பம்பாய் ''புரோலைன்''.

வட்டக் கழுத்து டீ ஷர்ட்டே முதலில் தோன்றியது. பிறகு காலர் உடையவை அறிமுகமாயின. மூன்று பட்டன்கள் உடையவை பின்னர் முளைத்தன என்றாலும் முதல் ரகத்துக்கே இன்னும் மவுசு.

''பிய்த்துக் கொண்டு போகிறது'' என்கிறார் பட்டேல். இவர் நுங்கம்பாக்கம் புரோ ஷாப்பின் முதலாளி. 'வேறேதோ வாங்க வருவார்கள். குறைந்த விலைக்கு கிடைக்கும் டீ ஷர்ட்டை வாங்கிப் போய் விடுவார்கள்' என்கிறார். புரோலைன் 18 வண்ணங்களில் கிடைக்கிறது. விலை ரூ. 99! (நூறு என்றால் ரொம்ப அதிகமாகத் தோன்றும்!)

புரோலைன் டீ ஷர்ட்களில் வண்ண டிசைன்கள், ஓவியங்கள், வாசகங்கள்



# ஸ்ரீ கந்தசுவாமி
## பர்மனெண்ட் பண்டு லிமிடெட்

மத்திய அரசால் அங்கீகரிக்கப்பட்ட **நிதி நிறுவனம்** துவக்கம் 1990
பதிவு அலுவலகம்: 60, சாமிபண்டாரம் தெரு, சிந்தாதிரிப்பேட்டை, சென்னை - 600 002
கிளை அலுவலகம்: 36, ஜீனிஸ் ரோடு, சென்னை - 600 015.

### வெகுமதி முதலீட்டுத் திட்டம்

ரூ. 580/- செலுத்துவீர். 252 மாதங்கள் நிறைவில் ரூ. 40,000/- பெறுவீர்.

### பிக்சட் டிபாசிட் திட்டம்

| 46 நாள் | 90 நாள் | 6 மாதம் | 1 ஆண்டு | 2 ஆண்டு | 3 ஆண்டு | 4 ஆண்டு | 5 ஆண்டு |
|---|---|---|---|---|---|---|---|
| 13% | 14% | 15% | 17% | 18% | 18.5% | 19% | 20% |

மாத வட்டிக்கான செக்குகள் முன்கூட்டியே கொடுக்கப்படும்.
உங்கள் டிபாசிட்டுகள் 45 மாதங்களில் 2 மடங்காகிறது
90 மாதங்களில் 4 மடங்காகிறது.

### காமதேனு மணிபேக் திட்டம்

| வைப்புத் தொகை | முதல் ஐந்தாம் ஆண்டு முடிவில் கிடைக்கும் தொகை | இரண்டாம் ஐந்தாம் ஆண்டு முடிவில் கிடைக்கும் தொகை | மூன்றாம் ஐந்தாம் ஆண்டு முடிவில் கிடைக்கும் தொகை |
|---|---|---|---|
| ரூ. 6,320/- | ரூ. 6,000/- | ரூ. 6,000/- | ரூ. 56,320/- |
| ரூ. 12,640/- | ரூ. 12,000/- | ரூ. 12,000/- | ரூ. 1,12,640/- |
| ரூ. 25,280/- | ரூ. 24,000/- | ரூ. 24,000/- | ரூ. 2,25,280/- |

### பென்ஷனர் நலத் திட்டம் - வட்டி 19.5%

வயோதிகர், விதவைகள், ஊனமுற்றோர், கல்வி மற்றும் அறக்கட்டளை பயன் பெறலாம்.

### செல்வக்களஞ்சியம் டிபாசிட் திட்டம்

உங்கள் குழந்தையைக் குபேரனாகக் காண ஆசையா! இதோ
ரூ. 7500/-ஐச் செலுத்தி 15 வருட முடிவில் ரூ. 1,25,000/- பெறலாம்
ரூ. 9000/-ஐச் செலுத்தி 15 வருட முடிவில் ரூ. 1,50,000/- பெறலாம்
சேவிங்ஸ் கணக்குகள் மீது 10% வட்டி

SURESH

### ரெக்கரிங் டிபாசிட் திட்டம்

மாதம் ஒன்றுக்கு ரூ.25-ம் அதன் பெருக்கமும் கொள்ளப்படும்

| மாதம் | 12 | 24 | 36 | 48 | 60 | 72 | 80 |
|---|---|---|---|---|---|---|---|
| ரூ. 100 | 1,320 | 2,860 | 4,720 | 7,200 | 10,050 | 13,400 | 17,500 |

**கடன்**
நகைகள் பேரில் கிராம் 1க்கு ரூ.300/- வழங்கப்படும்
சென்னை மாநகரில் உள்ள சொத்துக்கள் பேரிலும் வழங்கப்படும்.
வட்டி விதம் ரூ. 1.85

H.O. : Friday Holiday
B.O. : Tuesday Holiday
Business Hours
Week Days 9.00 A.M. - 1.00 P.M. &
2.00 P.M. - 6.00 P.M.

சேர்மன் P. பாலசுப்பிரமணியம், B.Sc.,
சீனியர் டிரஸ்டி
ஸ்ரீ கந்தகோட்டம்
சென்னை - 3.

பங்குதாரர்களுக்கு மட்டும்

பாதுகாப்பு பெட்டக வசதியும் உண்டு.




◆ கனமான தீபாவளி மலரைக் கையில் ஏந்திய படி படித்திட முடியாமல், குழந்தையை மடியில் கிடத்தி மகிழ்வது போல மடியில் வைத்துக் கொண்டு தீபாவளி முதல் பந்த் வரை வந்த விடுமுறை நாட்களில் படித்து மகிழ்ந்தேன். புரட்டப் புரட்ட மடை திறந்த வெள்ளம் மாதிரி எண்ணற்ற விஷயங்கள்... பாரதி முதல் கண்ணதாசன் வரை - கட்டுரை இக்கால இளம் தலைமுறையினருக்கு ஒரு வரப்பிரசாதம்.

சென்னை - 39, சாந்தி கமலாநாதன்.

◆ தீபாவளி மலரில் ம.செ.யின் அட்டைப் படம் தெய்வீக மணம் கமழ, நெஞ்சைக் கொள்ளை கொண்டது. பல அரிய தகவல்கள், கட்டுரைகள், போட்டோக்கள், போட்டிகள் என தீபாவளி மலரின் ஒவ்வொரு பக்கமும் கல்கி எங்களுக்குக் கொடுத்த தீபாவளி போனஸ்தான்!

தி.வெ. நல்லூர், வைத்தா.

## ஒவ்வொரு பக்கமும் தீபாவளி போனஸ்!

◆ ஜகத்குருவின் அருளாசியும், கவிசிவத்தின் அட்டைப் படக் கட்டுரையும், கண்ணுக்கும் கருத்துக்கும் நல்ல விருந்து.

வாடூர், ஆர். தமிழரசி.

◆ தீபாவளிப் பண்டிகையின் குதூகலத்தை இரட்டிப்பாக்கி விட்டது கல்கி தீபாவளி மலர். அமரர் கல்கியின் நெடுங்கதை, ரா. கி. ரங்கராஜனின் துணுக்குகளைப் பற்றிய சிறுகதை, எம்.எஸ். உதயமூர்த்தியின் மாறுபட்ட சிந்தனை - இவை மலருக்கு மகுடங்கள்.

முடிகொண்டநல்லூர், க. ராஜேந்திரன்.

◆ எக்கச்சக்கமாய் எல்லாப் பொருட்களும், விலைவாசியில் போட்டி போட்டுக் கொண்டு விஷமென உயரும் இந்நிலையில் வண்ணத்தில் ஜொலிக்கும் கல்கி மலர், நியாயமான விலையில் வந்துள்ளது மிகவும் பாராட்டத் தக்கது.

பாண்டிச்சேரி, கல்வே. எஸ். சதாசிவம்.

◆ சபாவளி, ஆகயா எலெக்ஷன் போன்ற வண்ணக் கார்ட்டூன் பக்கங்கள் அசர வைக்கும் குபீர்ச் சிரிப்பை ஏற்படுத்தியது.

மங்கைநல்லூர், ஆர். செல்வராணி.

◆ 'பாகவதத்தில் இராமாயணம்', 'பாரதி முதல் கண்ணதாசன் வரை', மயிலாடுதுறை ஸ்ரீமேதா தட்சிணாமூர்த்தி, ஸ்ரீ அபயாம்பிகை, லட்சத்தீவு விசிட், கொண்டப்பள்ளி பொம்மைகள், கிருஷ்ணா நதிக்கரையில் என்று ஒவ்வொரு வண்ணப் புகைப்படத்தையும் பார்த்துப் பார்த்து பிரமித்தேன்.

மயிலாடுதுறை, சின்னஞ்சிறு கோபு.

இவற்றை மக்களின் விருப்பங்களை எடை போட்டுப் பார்த்துக் கம்ப்யூட்டர் உதவியுடன் தயாரிக்கின்றனர். நவீன தொழில் நுட்பம் பயன்படுத்தி, இவற்றை டீ ஷர்ட்களில் பதியச் செய்கின்றனர்.

ஏற்றுமதிக்கான உயர் ரக டீ ஷர்ட்டுகள் ரூ. 300 முதல் ரூ. 750 வரை விலை மதிப்புடையவை.

லேட்டஸ்டாக, குழந்தைகள் பக்கம் டீ ஷர்ட் தயாரிப்பாளர்கள் தங்கள் கவனத்தைத் திருப்பியுள்ளனர். அவர்களைக் கவரக் கூடிய பளீர் வர்ணக் கார்ட்டூன் படங்களுடன் வாசகங்களை இணைத்து வெற்றி கண்டுள்ளனர். உதாரணமாக "Those who indulge, Bulge!" என்ற வாசகத்துடன் ஒரு குண்டு பன்றிக்குட்டி சோம்பலாகப் படுத்திருக்கும். இப்படிப் பல கற்பனைகள்.

தவிர டி ஷர்ட்டின் ஒரு பக்கம் ஒரு வர்ணம்; மறுபக்கம் இன்னொரு வர்ணம் என்பது போன்ற நூதன உத்திகளும் கையாளப்படுகின்றன. சென்னையில் ''லிட்டில் கிங்டம்'' என்ற குழந்தைகள் சாதனங்களுக்கான நிறுவனம், அமெரிக்காவின் ஹெல்த் டெக்ஸுடன் இணைந்து, லைசென்ஸ் பெற்று, ''ஹெல்த் டெக்ஸ்'' டீ ஷர்ட்டுகளை உருவாக்கி விற்பனை செய்வதாக, அதன் மேலாளர் சதானந்த் சொன்னார். பெனடன் என்ற நிறுவனமும் உலகெங்கும் கிளை பரப்பியுள்ளது. சென்னையில் உள்ள பெனடன் டி ஷர்ட், இந்தியக் குழந்தைக்கும் அதே நேர்த்தியில் கிடைக்கிறது.

இப்போது இந்தியாவில் பெனடன் நிறுவனம் டி.ஸி.எம்முடன் இணைந்து 'டை' (சாயம்) உற்பத்திப் பிரிவு தொடங்க இருக்கிறது. பெனடனின் முதலீடு இருபது மில்லியன் டாலர்கள்!

தரமான கெட்டிச் சாயத் தயாரிப்பு, இந்திய டீ ஷர்ட்டுகளின் தரத்தை மட்டுமின்றி, தோற்றப் பொலிவையும் அதிகரிக்கும்.

இவ்வளவு இருந்தும் டீ ஷர்ட் தொழில் லாபத்தில் கொழிக்க வேண்டுமென்றால் கிராமப்புற மார்க்கெட்டைப் பிடிக்க வேண்டும். அதற்கான முயற்சிகளையும் இந்தத் துறை சீக்கிரமே மேற்கொள்ளும் என்று எதிர் பார்க்கலாம். நமது கதாநாயகர்கள் சிலரைப் பிடித்து டீ ஷர்ட் அணிந்த கோலத்தில் ஏர் உழச் சொன்னால் போதுமே!

- துளசி

மேலட்டை வண்ணப்படம், படங்கள் : **கோபிநாத்.**

மாடல்ஸ் : சந்திரமௌலி, மஹாதேவன், ராமகிருஷ்ணன், டி. ராகவன்.

# சாதனை மன்னர் சுவாமி!

வி. டி. சுவாமி

ஒன்றுமில்லாத நிலையிலிருந்து வாழ்க்கையில் உயர்ந்து சீரும் சிறப்புமாக விளங்கும் பலரை நாம் எளிதில் காண முடியும். இவ்வாறு வாழ்க்கையில் உயர்கிறவர்களுக்கு, இடையில் ஒரு சரிவு ஏற்பட்டு விட்டால் அதை அவர்களால் தாங்கிக் கொள்ளவே முடியாமல் போவதையும் அவ்வப்போது பார்க்கிறோம். வீழ்ச்சியைத் தாங்கிக் கொண்டு மறுபடி திட்டமிட்டுச் சாதனைகள் புரிபவர் வெகு சிலரே. இதற்கு அசாதாரணமான திடசித்தமும் தன்னம்பிக்கையும் தேவை. இத்தகைய அபூர்வமான மனிதர்களுள் ஒருவர் வி.டி. சுவாமி.

பல ஆண்டுகளுக்கு முன்னால் கிராமத்திலிருந்து ரயில் டிக்கெட் கூட எடுக்க வசதியில்லாமல் ஓசிப் பயணம் செய்து சென்னை வந்து சேர்ந்த வாலிபர் சுவாமி, இங்கு மங்கும் சிலரிடம் பணியாற்றி மனத்திருப்தி பெறாமல் கடைசியில் கல்கத்தாவைச் சென்றடைந்தார். சிறிதாக வியாபாரம் ஆரம்பித்து விடாமுயற்சியாலும், அனுபவபூர்வமாக வியாபார நுணுக்கங்களை அறிந்து கொண்டதாலும் நாளடைவில் மாபெரும் வெற்றிகளைக் குவித்தார். வி.டி. சுவாமி அண்டு கம்பெனி, ஏற்றுமதி இறக்குமதி வர்த்தகத்தில் பெரும் சாதனைகள் புரிந்து வளர்ச்சியுற்றது. இடையில் ஏற்பட்ட வீழ்ச்சியையும் வெற்றிக்கான படிகளாக உருமாற்றிய வி.டி. சுவாமி, வியாபாரத்துடன் நிற்கக் கூடாது; தொழில்துறையிலும் புகுந்து வேலை வாய்ப்புக்களைப் பெருக்குவதன் மூலம் நாட்டுக்கு உதவ வேண்டும் என்று தீர்மானித்தார். காவேரி ஸ்ட்ரக்சரல்ஸ் என்ற பிரும்மாண்டமான தொழிலகம் திருச்சி அருகே காவேரிக் கரையில் உருவாயிற்று.

அங்கே பல்வேறு ஆலைகள் அமைக்கவும் அனல்மின் நிலையம் போன்றவற்றை உருவாக்கவும் பல எஃகுப் பாகங்கள் தயாராகின்றன. அயல்நாட்டுத் தொழில் நுணுக்கம் இன்றி நிறைவேற்ற முடியாது என்று கருதப்பட்ட பல அம்சங்கள் இப்போது நம்மவராலேயே வரை படம் தொடங்கி இறுதிக் கட்டம் வரை செய்து முடிக்கப்படுகின்றன. இங்கு தயாராகும் ராட்சச எஃகு வடிவங்களை ஆலை நிர்மாணிக்கப்படும் இடத்துக்கு எடுத்துச் செல்வதே ஒரு சவாலாக அமைகிறது! இதற்காகப் பாலங்கள் பலப்படுத்தப் படுகின்றன; சாலைகள் அகலப்படுத்தப் படுகின்றன!

"சாதனை மன்னர்'' என்று கருதப்படக் கூடிய வி.டி. சுவாமி, கல்கி பத்திரிகையைத் தொடங்கிய ''கல்கி'', சதாசிவம் ஆகியோருக்குக் குடும்ப நண்பராக விளங்கி, அவர்களின் காரியங்கள் யாவிலும் கைகொடுத்து, சுகதுக்கங்களைப் பகிர்ந்து கொண்டவர். அவரது இலக்கிய கலை ஆர்வங்கள் சென்னை மியூஸிக் அகாதமி, கிருஷ்ணகான சபை போன்ற நிறுவனங்களுடன் தொடர்பு கொண்டு அவற்றின் வளர்ச்சிக்கும் உதவச் செய்தது.

'இடது கை தருவது வலது கை அறியாது' என்பது சுவாமிக்கு ரொம்பப் பொருத்தம். சில்லறையாகவும் பெருந்தொகைகளாகவும் அவரவர் தகுதி அறிந்து வாரி வழங்கிய வள்ளல் அவர். ''சங்கர நேத்ராலயா'' போன்ற பல சமுதாய நல அமைப்புக்கள் அண்மையில் காலஞ்சென்ற சுவாமியை நன்றியோடு எண்ணிப் பார்க்கின்றன.

சாதனையாளர்களுக்கே உரிய கோபம் சுவாமிக்கும் உண்டு. அது தார்மிகக் கோபம். திறமையின்மையை அல்லது நேர்மையின்மையை அல்லது சோம்பலைத் தம்மை நெருங்கியிருப்பவர்களிடம் சகித்துக் கொள்ள முடியாததால் எழும் கோபம். அதை விட்டால் எவரிடமும் எளிமையாகப் பழகி, சிரிக்கச் சிரிக்கப் பேசுவதில் வல்லவர். மற்ற அம்சங்களோடு இந்தக் குணமும் சேர, ''கல்கி''யின் மனத்தை

அதிகமாகக் கவர்ந்தார் வி.டி. சுவாமி.

“கல்கி”யின் கல்கத்தா விஜயத்தின் போது வி.டி. சுவாமி நண்பருக்குச் சாரதியாக விளங்கினார். “கல்கி” போயிருந்த சமயம், 1947 சுதந்திர தினத்துக்கு நான்கைந்து நாட்கள் முன்னதாக ஹிந்து - முஸ்லிம் கலவரங்கள் வங்கத்தில் உச்சகட்டத்தை அடைந்திருந்த தருணம். ஆபத்தான அந்தச் சூழ்நிலையிலும் சுவாமியின் துணிச்சலைப் பற்றித் தமக்கே உரிய நகைச்சுவை கொப்பளிக்கும் பாணியில் “கல்கி” எழுதுகிறார் :

“மறுநாள் 11உ பொழுது விடிந்த பிறகு, இனிமேல் சும்மா இருக்கமுடியாது என்றும், கல்கத்தாவைச் சுற்றிப் பார்த்தேயாக வேண்டும் என்றும் ஏகமனதாக முடிவு செய்தோம். பாரதி தமிழ்ச் சங்கத்தின் முக்கியமான நிகழ்ச்சி நிறைவேறிவிட்டது. இனிமேல் கொஞ்சம் அபாயத்துக்குத் துணிந்து வெளியே போகலாமல்லவா? எனவே, ஸ்ரீ வி. டி. சுவாமியைத் தருவித்து எங்கள் விருப்பத்தை வெளியிட்டோம்.

ஸ்ரீ வி. டி. சுவாமி ரொம்பத் துணிச்சல் உள்ளவர் என்று எல்லாரும் சொல்லியிருந்தார்கள். அவருடன் வெளியில் புறப்பட வேண்டாம் என்றும் எச்சரிக்கை செய்திருந்தார்கள். ஒரு வருஷமாகக் கல்கத்தாவில் நடந்த கலவரங்களின் போது, கலகப் பிரதேசங்களுக்குள்ளே தைரியமாகப் புகுந்து பல தமிழர்களையும் வங்காளிகளையும் அவர் காப்பாற்றிக்கொண்டு வந்து சேர்த்ததாகவும் தெரிவித்திருந்தார்கள். ஆகையால், அவருடன் போனால்தானே எங்களுடைய நோக்கம் நிறைவேறும்?

ஸ்ரீ வி. டி. சுவாமி உற்சாகத்துடன் எங்களுக்கு கல்கத்தா நகரைச் சுற்றிக் காட்ட ஒப்புக் கொண்டார்.

“கொஞ்சம் அபாயப் பிரதேசங்களையும் எட்டிப் பார்த்தால் தேவலை” என்று நான் சொன்னதற்கு, “அதெல்லாம் முடியாது. அபாயப் பிரதேசங்களின் நடுமத்திக்குத்தான் உங்களை அழைத்துப் போவேன். மற்ற இடங்களுக்குத்தான் நீங்களே போகலாமே? நான் எதற்கு?” என்றார்.

ஸ்ரீ சுவாமி வண்டி ஓட்ட ஆரம்பித்த பிறகு எங்களுக்கு அபாயத்தைப் பற்றிய கவலையே இல்லாமற் போய் விட்டது. எந்த அபாயந்தான் இந்த அபார வேகத்தைப் பின்தொடர்ந்து வந்து பிடிக்க முடியும்?

சாதாரணமாக ஜனக் கூட்டமுள்ள இடங்களில் ஸ்ரீசுவாமி மோட்டார் ஓட்டும் வேகம் மணிக்கு 60 மைல்; கூட்டமில்லாத சாலைகளில் மணிக்கு 90 மைல். அநேகமாகக் கூட்டமில்லாத தெருக்கள் வழியாகவே வண்டியை விட்டுக் கொண்டு போனார். சிற்சில சமயம் வண்டியை நிறுத்தவும் செய்தார். நிறுத்தி விட்டு, “இந்த இடத்தில் சென்ற ஆகஸ்டு மாதத்தில் நூறு பிரேதங்கள் கிடந்தன. அதோ அங்கேயெல்லாம் இரத்த வெள்ளம் ஓடிற்று. இதோ தெரிகிற வீட்டை ஆயிரம் பேர் சூழ்ந்து முற்றுகையிட்டார்கள். அதோ அந்தச் சந்திலேதான் பிரசித்தி பெற்ற... குண்டா இருந்தான். அவனை ஜனங்கள் கொன்று விட்டார்கள்!” என்று இப்படிப் பல ரஸமான விஷயங்களைச் சொல்லி விட்டு, நிறுத்திய வண்டியை மறுபடியும் விட்டார்! “15உ என்ன நடக்கப் போகிறதோ?” என்ற கவலை சீக்கிரத்திலேயே எங்களுக்குப் போய்விட்டது. 15உ வரையில் உயிரோடிருந்தால் அல்லவா அன்று நடக்கப்போவது பற்றிக் கவலைப்பட வேண்டும்? சுவாமியின் தயவினால் அப்படிக் கவலைப் படவேண்டிய அவசியம் நமக்கு ஏற்படாது என்று திருப்தி அடைந்தோம்!”

சுவாமியின் தயவினால் அன்று கலவரப் பிரதேசங்களைச் சுற்றிப் பார்த்த “கல்கி”, அதைப் பற்றி எழுதுவதற்கு சுவாமியின் தயவினால் சுதந்திர தினத்துக்கு அப்பாலும் வெகுகாலம் உயிரோடு இருந்தார் என்பதைக் கூறத் தேவையில்லை! டிசம்பர் 5, அமரர் “கல்கி”யின் நினைவு நாளன்று அவரையும் அவரது நண்பர் சுவாமியையும் ஒருசேர எண்ணிப் பார்த்து அஞ்சலி செலுத்துகிறோம்.



“இப்படி யாருக்குமே சொல்லாம திடீர்னு கல்யாணம் பண்ணிகிட்டதுல எங்களுக்கு உங்க மேல கொஞ்சம் வருத்தம்தான் மேடம்!”

“கவலைப்படாதீங்க. *டைவர்ஸ் பண்றப்ப நிச்சயமா எல்லாருக்கும் சொல்லிட்டே செய்யறேன்!”

- புதுவண்டி ரவீந்திரன்.

# சூர்யா எஸ்டேட் பைனான்ஸ்

## பிக்சட் டெபாசிட் வரவேற்கப்படுகிறது

வட்டி விகிதம்

**24%**

வருடத்திற்கு

### 1. நற்பவி டெபாசிட் திட்டம்

* ரூ.1000/- டெபாசிட் அல்லது அதற்கு மேல்
* குறைந்த கால அளவு டெபாசிட் 1 வருடம்
* வட்டி - மாதாமாதம், காலாண்டு, மற்றும் அரை ஆண்டுக்கு வழங்கப்படும்

ரூ. 5000/-க்கு மேல் டெபாசிட் செய்பவர்களுக்கு கவர்ச்சிகரமான பரிசுகள் உண்டு

### 2. சோழன் மறுமுதலீட்டுத் திட்டம்

உங்களது வைப்பு நிதி **36** மாதங்களில் இரண்டு மடங்காக ஆகிறது.

### 3. சிட்டுக் குருவி மாதாந்திர டெபாசிட் திட்டம்

இத்திட்டத்தில் மாதந்தோறும் ரூ.**250/-** முதல் ரூ.**1000/-** வரை ஓராண்டு முதல் ஐந்தாண்டு வரை செலுத்தி அதிக வட்டியுடன் திரும்ப பெறலாம்

★ பென்சன்தாரர்களுக்கு கூடுதலாக **1%** ஊக்கத் தொகை வழங்கப்படும்.

★ டெபாசிட் செய்யும்போதே வட்டிக்கும், செலுத்தும் தொகைக்கும் பின் தேதியிட்ட செக் வழங்கப்படும்.

மேலும் விவரங்களுக்கு அணுகவும்




**சூர்யா எஸ்டேட் பைனான்ஸ்**

No.12, வெங்கடேசன் தெரு, தி. நகர், சென்னை - 600 017. போன் : 442405

(G.R. தங்கமாளிகைக்கு எதிரில்) செவ்வாய் வார விடுமுறை

John

# மழையும் வெயிலும் எங்களுக்கு அல்ல!

**சுடும் வெயிலிலும், கொட்டுகின்ற மழையிலும் உடல் வருத்தம் பாராது சேவை செய்யும் சிலரின் நியாயமான சிரமங்களைக் கொஞ்சமாவது தெரிந்து கொள்வோமே!**

**சேகர் (டிராஃபிக் கான்ஸ்டபிள்) :**

மழை நாட்களில் சில சமயம் நிழற் குடை கூட இல்லாத இடங்களில், போக்குவரத்தைக் கட்டுப்படுத்திக் கொண்டு நாற் சந்திகளில் நாங்கள் நிற்க வேண்டியிருக்கிறது. அரசு, ஒரு ஸ்டேஷனுக்கு ஆறு மழைக் கோட்டுதான் கொடுக்கிறது. முன்பெல்லாம் தரம் நன்றாக இருந்தது. இப்பொழுதெல்லாம் உள்ளாடையும் நனைந்து விடுகிறது. கொட்டும் மழையில் வெடவெடக்கும் குளிரோடுதான் நின்று கொண்டிருக்கிறோம்.



எங்களுக்கெல்லாம் ஒரு நாளைக்கு பனிரெண்டு மணி நேரம் வேலை. டியூட்டிக்கு சுத்தமான, வெள்ளைச் சட்டைதான் போட்டுக் கொண்டு வர வேண்டும். வருடத்துக்கு இரண்டு செட் சீருடைதான் தருகிறார்கள். வெயிலிலும், வாகனப் புழுதியிலும் ஒரு சட்டையை ஒரு நாளுக்கு மேல் போட்டுக் கொள்ள முடிவதில்லை. வாஷிங் அலவன்ஸ் மாதம் ரூபாய் பதினைந்தில் சோப் வாங்குவதா, இஸ்திரி செய்வதா? 'ட்ரிம்' ஆக வரவில்லையென்றால் 'பனிஷ்மெண்ட்' நிச்சயம் உண்டு.

**சையத் ஷாஹீன் (போஸ்ட்மேன்)**

வெயிலோ, மழையோ காலை எட்டு மணிக்கு நாங்கள் ஆபீசுக்கு வந்து விட வேண்டும். தபால்களைப் பிரித்து எடுத்து

* ஜி. பாபு

* சையத் ஷாபுதீன்



வைத்துக் கொண்டு, பட்டுவாடாவைத் தொடங்குவோம். இதற்காக எங்களுக்கு ஒரு பை கொடுத்திருக்கிறார்கள். ஆனால் தபால்களின் எண்ணிக்கை அதிகமாக இருக்கும் காரணத்தால் அதைத் தவிர, சொந்தப் பையிலும் போட்டுக் கொண்டு செல்கிறோம். வெயில் நாட்களில் ஓரளவு சமாளித்து விடலாம். மழை நாட்கள்தான் ரொம்பக் கஷ்டம்.

நாலு வருடங்களுக்கு ஒரு ரெயின் கோட்டு என்கிற கணக்கில் ஒவ்வொரு போஸ்ட்மேனுக்கும் தரப்படுகிறது. ஒரு மழைக் கோட்டு நான்கு வருடங்களுக்குத் தாக்குப்பிடிக்குமா? குடையும் கிடையாது. உடல் நனைந்தாலும், பொது மக்களுக்குச் சேர வேண்டிய தபால்களைக் கொஞ்சம் கூட ஈரம் படாத நிலையில் அவர்களுக்குச் சேர்ப்பிக்க நாங்களே ஏற்பாடுகள் செய்து கொள்கிறோம். சில இடங்களில் இரண்டு அடி உயரம் கூட மழை நீர் தெருவில் நிற்கும். அப்படியும் பட்டுவாடாவைச் செய்து முடிக்கிறோம். பத்து ஆண்டுகளில் மக்கள் தொகை பெருகி, குடியிருப்புகள் எக்கச்சக்கமாக அதிகரித்து விட்டன. ஆனால் அன்று இருந்த அதே ஆள்பலம்தான் இன்றும் தபால்துறையில்!

**எம். ரமேஷ் : (பால் விநியோகிப்பவர்) :**

தினமும் விடியற்காலை மூன்று மணிக்கும், மதியம் பனிரெண்டரை மணிக்கும் பால் பூத்திற்குச் செல்ல வேண்டும். எங்களுடைய ஏஜெண்ட் உத்தரவுப்படி அந்தந்த ஏரியாக்களுக்கு உண்டான பால் பாக்கெட்டுகளைக் கணக்குப் பண்ணி எடுத்து வருகிறோம்.

மழை நாட்களில் சில சமயம் வண்டி வருவதற்கே ரொம்ப நேரமாகி விடும். அது வரை நனைந்தபடி காத்திருக்க வேண்டும். எங்கள் சொந்த சைக்கிளில் ரெயின் கோட்டு, குடை எதுவும் இல்லாமல்தான் போகிறோம். சில சமயம் பிளாஸ்டிக் கவர் கிடைத்தால் தலையில் கவிழ்த்துக் கொண்டு செல்வோம். குண்டும், குழியுமான தெருக்களில் சைக்கிளைத் தள்ளிக் கொண்டுதான் வர வேண்டியிருக்கிறது. சில வீடுகளில் திருட்டுப் பயம் காரணமாக கேட்டைப் பூட்டி வைத்து இருப்பார்கள். கதவைச் சப்தப்படுத்தி, அவர்கள் வந்து பாலை வாங்கிப் போகும் வரை மழையில் நிற்கத்தான் வேண்டியிருக்கிறது. இதைத் தவிர்க்கச் சில வீடுகளில் கேட்டில் பையைக் கட்டித் தொங்க விடுகிறார்கள். அதில் நாங்கள் பால் பாக்கெட்டைப் போட்டால் சில சமயம் திருட்டுப் போய் விடுகிறது; அல்லது பூனை குடித்து விடுகிறது.



* எம். ரமேஷ்

**ஜி. பாபு (நாளிதழ் விநியோகிப்பாளர்)**

மழை நாட்களில் குடையைப் பிடித்துக் கொண்டோ, மழைக் கோட்டு போட்டுக் கொண்டோ சைக்கிள் ஓட்டுவது சிரமம். அதனால் மழையில் நனையப் பயப்படாமல்தான் வேலை செய்ய வேண்டும். நாங்கள் நனையலாமே தவிர நாங்கள் கொண்டு வரும் பத்திரிகை ஈரமாகி விட்டால், வாடிக்கையாளர்கள் 'டேமேஜ்' என்று சொல்லித் திருப்பி விடுவார்கள். எனவே அவற்றைப் பிளாஸ்டிக் ஷீட்டில் சுற்றி, பாதுகாப்பாய் எடுத்துப் போக வேண்டும்.

இன்று திரும்பின பக்கமெல்லாம் பல மாடிக் கட்டடங்கள் வந்து விட்டன. ஒவ்வொரு மாடியிலும் மூன்று, நாலு குடித்தனங்கள். தமிழ், ஆங்கிலம் என்று வகைப் படுத்தி தினசரிகளையும் பத்திரிகைகளையும் மூன்று மாடிகள் வரை சுமந்து கொண்டு போக வேண்டியிருக்கிறது. இதற்குள் கீழே வைக்கப்பட்டிருக்கும் சைக்கிள் சில சமயம் திருட்டுப் போய் விடுகிறது. குண்டு குழியான சாலையில் மழை நீர் தேங்கி நிற்க, சைக்கிளைப் போட்டுக் கொண்டு பேப்பர் கட்டுடன் விழுந்த அனுபவமும் ஏற்பட்டிருக்கிறது. இத்தனை சிரமம் இருந்தாலும் வாடிக்கையாளர்கள், செய்திகளை அறிந்து கொள்ள ஆவலுடன் காத்திருந்து, எங்கள் வருகையைக் கண்டதும் முகம் மலர்கிறார்களே, அப்போது இந்தக் கஷ்டமெல்லாம் மாயமாய் மறைந்து விடுகிறது!

தொகுப்பு :
**மாலதி சந்திரசேகரன்**
புகைப்படங்கள் :
**கோபிநாத்**


அய்யய்ய... உங்களுக்கு சிக்கல் எடுக்கவே தெரியலையே? நான் சொல்லித் தர்றேன், கேட்டுக்குங்க...
கிளிண்டன்
போஸ்னியா சிக்கல்
சோமாலியா சிக்கல்
காஷ்மீர் சிக்கல்




இதுவரைக்கும் நடந்த எல்லா ரவுண்ட்ஸ்லேயும் தூள் பறத்திட்டீங்க! ஃபைனல்ல பார்க்கத்தான் துடியா துடிச்சிட்டிருக்கேன், ஆல் த பெஸ்ட்!




சரத்பவார்
தேர்தல் வழக்கில் உச்சநீதிமன்றத் தீர்ப்பு
ஹையா... அக்னிப் பரீட்சையில தேறிட்டேன்...


தேர்தல் வழக்கில் உச்சநீதிமன்றத்தின் கண்டனம்



# கல்கி


1993
டிசம்பர் 5
மலர் : 52
இதழ் : 19
ஸ்ரீமுக
கார்த்திகை 20




## பவாரின் அக்னிப்பிரவேசம்!

எல்லா மாநிலங்களிலும் தேர்தல் முடிந்த பிறகுதான் வோட்டுக்கள் எண்ணப்படும் என்று எந்த நோக்கில் சேஷன் தீர்மானித்தாரோ, அது நிறைவேறவில்லை. ஒரு மாநிலத் தேர்தல் நடந்து, முடிவுகள் அறிவிக்கப்பட்டால், அது அடுத்த மாநிலத்தில் வாக்காளர் உள்ளங்களில் ஒரு பாதிப்பை ஏற்படுத்தும் என்பது மெய்தான். 'வெற்றி பெறுகிறவருக்கே வோட்டு' என்ற மனப்பான்மை நமது மக்களிடம் அதிகமாக உண்டு. ஆனால் ஒரு மாநிலத்தில் தேர்தல் நடக்கும்போதே தேர்தல் கணிப்பாளர்கள் தங்கள் வேலையைத் தொடங்கி, வோட்டுப் போட்டு விட்டு வரும் வாக்காளர்களில் ஒரு சிறிய சதவிகிதத்தினரை விசாரிக்கிறார்கள். இந்த விசாரிப்பின் அடிப்படையில் யார் தேர்தலில் வெற்றி பெறக்கூடும் என்ற அனுமானத்தை வெளியிடுகிறார்கள். இதனை எல்லா நாளிதழ்களும் கர்ம சிரத்தையாகப் பிரசுரிக்க, இந்தக் கணிப்பு பிற மாநிலங்களில் வாக்களிப்புத் தீர்மானங்களைப் பாதிக்கவே செய்கிறது. எனவே சேஷனின் நோக்கம் முற்றிலும் வெற்றி பெற்றதாகக் கருதுவதற்கில்லை.

தேர்தல் கணிப்பாளர்கள், 'பி.ஜே.பி. வெற்றி பெறுவதற்கான சாத்தியங்களே அதிகம்' என்றுதான் தங்கள் தீர்ப்பை வழங்கியிருக்கிறார்கள். இந்தக் கணிப்பு மெய்யானாலென்ன, அக் கட்சி ஹிந்துத்துவத்தை முன்வைத்து மக்களின் மத உணர்ச்சிகளைத் தூண்டி வெற்றி பெற்றதாகக் காங்கிரஸ் பழிசுமத்தப் போகிறது. மாறாக, தேர்தல் கணிப்புகள் பொய்யாகி விட, காங்கிரஸ் வெற்றி பெற்றாலோ, அக்கட்சி பணபலத்தால் வென்றதாக பி.ஜே.பி. பழி சுமத்தும். ஆக, எந்தக் கட்சி வெற்றி பெற்றாலும் பெருமைப்பட ஒன்றுமில்லை என்றாகி விட்டது.

ஏற்கெனவே பல தேர்தல்களில் நாம் கண்டுள்ள பல அநீதிகள் இந்த வட மாநில இடைத் தேர்தல்களிலும் நடந்துள்ளன. அதிலும் இமாசலப் பிரதேச ஆளுனர் தமது மகன் வேட்பாளராக நிற்கும் தொகுதியில் முகாமிட்டு, அவரது வெற்றி வாய்ப்புக்களுக்காக வேலை செய்தார்; தமது வாகனங்களைப் பயன்படுத்த அனுமதித்தார் என்பது ரொம்பவும் கேவலம். ஆளுனர், 'அப்படியெல்லாம் நடக்கவில்லை' என்று மறுத்தபோதிலும், தேர்தல் கமிஷன் தனக்குக் கிடைத்த தகவல்களின் அடிப்படையில் அத்தொகுதியில் தேர்தலையே ரத்து செய்து விட்டது. ஆளுனர் குல்ஷர் அகமது ராஜினாமா செய்யவும் நேர்ந்தது. இதே போன்றதொரு குற்றச்சாட்டு உ.பி. ஆளுனர் மோதிலால் வோரா மீதும் பி.ஜே.பி.யினால் சுமத்தப்பட்டுள்ளது. வோரா குற்றமற்றவர் என்று தேர்தல் கமிஷன் கூறி விட்டது என்றாலும், சந்தேக மேகங்களால் சூழப்பட்டு நிற்கிறார்.

இவையெல்லாம் நமது ஜனநாயக அரசியலில் புகுந்து விட்டிருக்கிற அதர்மப் போக்கையே அடிக்கோடிட்டுக் காட்டுகின்றன. குல்ஷர் அகமது சட்டபூர்வமாக நாளை வாதாடித் தப்பிக்கலாம். ஆனால் தார்மீக நெறிகளையும் மரபுகளையும் கடைப்பிடிக்காத ஜனநாயகம் வலுப்பெற்று பிரகாசிக்க முடியாது. 'தியாக பூமி' என்றும் 'தர்ம பூமி' என்றும் 'ஞான பூமி' என்றும் வர்ணிக்கப்பட்ட இந்தியாவின் இன்றைப் பரிதாபநிலை இதுதான். இதை விடச் சோகம் வேறு என்ன?

சட்டபூர்வமாகத் தமக்குச் சாதகமான உச்சநீதிமன்றத் தீர்ப்பு வந்து விட்டதால் "நான் அக்னிப் பிரவேசத்தில் வெற்றி பெற்று விட்டேன்" என்று பெருமிதத்தோடு கூறுகிறார் மகாராஷ்டிர முதல்வர் ஷரத் பவார். ஆனால் அதே உச்சநீதி மன்றம் சட்டத்தை மட்டுமின்றி, தர்மத்தையும் எடுத்துக்காட்டியிருப்பதை மூடி மறைக்கிறார், அல்லது அலட்சியப்படுத்துகிறார்! சட்டபூர்வமாகப் பவார் மீது குற்றம் ஏதும் ருசுவாகவில்லை என்று தீர்ப்பு வழங்கிய அதே உச்சநீதிமன்றம், தேர்தலின் போது அவர் நடந்து கொண்ட முறை, பேசிய பேச்சு எல்லாம் ஒரு பெருந்தலைவருக்கு ஒவ்வாதவை; சிறந்த நாகரிக மரபுகளுக்கு முரணானவை என்பதை எடுத்துக் காட்டியுள்ளது. ஒரு மூன்றாம் தர அரசியல்வாதி போல் பவார் நடந்து கொண்டிருக்கிறார் என்பதைக் கூறாமல் கூறியுள்ளது. ஆக, சட்டத்தை மட்டும் கவனித்தால் போதாது, தர்மத்தையும் அனுசரித்துத் தலைவர்கள் நடந்து கொள்ள வேண்டும் என்பதை உச்சநீதி மன்றமே தனது தீர்ப்பில் வலியுறுத்தியுள்ளதாகச் சொல்லலாம்.

நமது அரசியல் தலைவர்களாவது, இதற்கெல்லாம் மசிவதாவது!

தமிழ்த்திரு
நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி
பாப்பா. - பாரதியார்.

# கி.ஆ.பெ.-95!



ராஜேஸ்வரி கல்யாண மண்டபத்தில் அரங்கம் கொள்ளாத கூட்டம். ஆர்.வி. தலைமை வகிக்க, ம.பொ.சி., சு. ராசாராம், கி. வெங்கடசுப்பிரமணியன், சிலம்பொலி செல்லப்பன் என்று பேச்சாளர் வரிசை. கி.ஆ.பெ. விசுவநாதம் 95வது பிறந்த நாள் விழா.

போன நூற்றாண்டில் பிறந்து இந்த நூற்றாண்டு இறுதி வரை வாழ்ந்து கொண்டிருக்கும் கி.ஆ.பெ., வரும் நூற்றாண்டையும் காண வேண்டும் என்று தங்கள் ஆசையை, பேசியவர்கள் தெரிவித்தார்கள். முறைப்படி பள்ளிப் படிப்பைக் கற்கவில்லையென்றாலும், ஆர்வத்தின் காரணமாகத் தமிழை அறிவுணர்ந்து, தொல்காப்பியத்தில் புலமை பெற்று தமிழின் வளர்ச்சிக்காகவே கி.ஆ.பெ. வாழ்ந்து வருவதைக் குறிப்பிட்டார்கள்.

''தமிழ், தமிழர் நலம், இரண்டைத் தவிர வேறெதையும் எண்ணிப் பார்க்காதவர் கி.ஆ.பெ.'' என்று சொன்ன ம.பொ.சி., ''யார் தமிழர்?'' என்ற சர்ச்சையும் அடிக்கடி தமிழ்நாட்டில் எழுவதைக் குறிப்பிட்டார். ''தேர்தலுக்கு தேர்தல் 'நீ தமிழனல்ல; அவன்தான் தமிழன்' என்றெல்லாம் பிரச்னையை உண்டாக்குகிறார்கள். யார் தமிழன் என்று கண்டுபிடிப்பது சுலபம். எவன் குறள் வழி வாழ்கிறானோ, அவனே தமிழன். இதைத்தான் கி.ஆ.பெ. கூறி வருவதுடன் வாழ்ந்தும் காட்டுகிறார்'' என்று முடித்தார்.

''கடைச் சங்கத்துக்குப் பிறகு, தமிழகத்தில் புலவர் குழு அமைத்த பெருமை கி.ஆ.பெக்கு மட்டுமே உண்டு. அந்தக் குழு, பழைய தமிழ்ச் சுவடிகளைத் தேடிக் கண்டுபிடித்து அச்சேற்றியது. ஏற்கெனவே தவறாக அச்சாகியிருந்தவற்றைத் திருத்தியது'' என்றார் ஆர்.வி.

''இந்தி எதிர்ப்புப் போராட்டம் தீவிரமாக நடந்து கொண்டிருந்த போது யாரோ ஒருவர் நமக்கு இரு மொழிகளும் வேண்டும் என்று உணர்த்த 'தமிழ் வேட்டி போன்றது; இந்தி சட்டை போன்றது' என்று குறிப்பிட்டார். உடனே கி.ஆ.பெ. 'சட்டை இல்லாமல் இருக்கலாம். ஆனால் வேட்டியில்லாமல் இருக்க முடியுமா?' என்று பதிலடி கொடுத்தார்!'' - சிரிப்பொலிகளுடன் தமது பேச்சை முடித்துக் கொண்டார் முன்னாள் ஜனாதிபதி.

தள்ளாத வயதில் இறுதி வரை அமர்ந்திருந்து, நன்றியுரையும் நிகழ்த்தினார் கி.ஆ.பெ. ''என் மேல் உள்ள அன்பினால் ஏராளமாகப் புகழ்ந்து தள்ளி விட்டார்கள். இனிமேலாவது அவர்கள் சொன்ன தகுதிக்கு உயர முயற்சி செய்கிறேன்'' என்றார் அடக்கத்துடன்.

தமிழ், தமிழர் என்ற வட்டத்துக்கு அப்பால் நிர்வாகி என்றும் கி.ஆ.பெ.யைக் குறிப்பிடலாம் என்பது அவர் பேச்சிலிருந்து தெரியவந்தது. ''முன்பு தமிழ்நாட்டில் மின் விநியோகம் செய்யத் தனியார் நிறுவனங்கள் இருந்தன. அப்படியொரு நிறுவனத்துக்கு என்னைத் தலைவராகப் போட்டார்கள். நான் பதவியேற்றவுடன், என் உபயோகத்துக்குக் கார் கொண்டு வந்து நிறுத்தப்பட்டது. வேண்டாமென்று சொல்லி விட்டு ரிக்ஷாவில் சென்றேன். நான் தலைவராக இந்த நிலத்தில் போட்ட முதலுக்கு இரண்டு பங்கு லாபம் வந்தது'' என்ற கி.ஆ.பெ., கொஞ்சமே அரசியலில் புகுந்து, எம்.ஜி.ஆர். ஆட்சியையும் இன்றைய 'ஜெ' ஆட்சியையும் அனுபவபூர்வமாக ஒப்பிட்டார். யாருக்கு அதிக மார்க் என்று கூறவும் வேண்டுமா?

- ப்ரியன்

# உங்கள் குழந்தை துறுதுறுவென இருக்க சமவிகித ஊட்டச் சத்து தேவை.

துறுதுறுவென இருப்பதற்குத் தேவையான சக்தியைப் பெறுவதற்கு, உங்கள் குழந்தைக்குச் 'சரியான' கலோரிகள் தேவை. புரோட்டீன்களும், கார்போஹைட்ரேட்ஸும், கொழுப்புச் சத்தும் சரியான சமச்சீர் விகிதத்தில் கலந்திருந்தால்தான் இந்தக் கலோரிகள் கிடைக்கும்.

இந்தச் 'சரியான' கலோரிகள் கிடைக்க வேண்டுமானால் இதற்குச் சிறந்த வழி ஊட்டச் சத்துக்கள் சம விகிதத்தில் கலந்த உணவைக் கொடுக்க வேண்டும்.

உங்கள் டாக்டரிடம் கேளுங்கள் சொல்லுவார், உங்கள் குழந்தைக்கு 4 மாதங்கள் ஆன பிறகு பால் மட்டுமே போதாது. ஒவ்வொரு வேளையும், ஒவ்வொரு நாளும், ஒவ்வொரு வாரமும் ஊட்டச் சத்துக்கள் சம விகிதத்தில் கலந்த திட உணவை உங்கள் குழந்தைக்குத் தர வேண்டும்.

எனவேதான் தாய்மார்கள் செரிலாக்கைத் தேர்ந்தெடுக்கின்றனர். ஊட்டச் சத்துக்கள் சம விகிதத்தில் கலந்த உணவான செரிலாக்கில் புரோட்டீன்கள் செறிந்துள்ள இரண்டு முக்கிய பொருட்களான பாலும் கோதுமையும் உள்ளன. கொழுப்புச் சத்து, கார்போஹைட்ரேட்ஸ், இரும்புச் சத்து, கால்ஷியம் ஆகிய சத்துக்களும் சரியான அளவில் கலந்துள்ளன. மேலும் இதற்கு வைட்டமின்கள் A,D,E,B–காம்ப்ளெக்ஸ் மற்றும் C பலம் சேர்க்கின்றன.

இன்னுமொரு சிறப்பு, செரிலாக் இப்பொழுது நெஸ்லேயின் புரட்சிகரமான புதிய Z-வகை என்ஸைமேட்டிக் முறைப்படி தயாரிக்கப்படுகிறது. இதனால் தானியங்கள் எளிதில் ஜீரணமாவதற்காக முன்கூட்டியே பக்குவப்படுத்தப்படுகின்றன. செரிலாக் மிக எளிதில் ஜீரணமாகி விடுகிறது. மிருதுவாகவும், சுவையாகவும் இருக்கிறது.

எனவே, உங்கள் குழந்தைக்கு 4 மாதங்கள் ஆனதும் செரிலாக் கொடுங்கள். ஏனென்றால், இதில் 'சரியான' அளவு கலோரிகள் உள்ளன. ஏனென்றால், உங்கள் குழந்தை துறுதுறுவென இருப்பதற்குத் தேவைப்படும் ஊட்டச் சத்துக்கள் சம விகிதத்தில் கலந்த திட உணவு இது.

புதிய சர்வதேச பேக்




இலவசம். செரிலாக் பேபி கேர் புத்தகம். உங்கள் குழந்தையின் வளர்ச்சிக்கான வழிகாட்டி. உங்களுக்கு விருப்பமான மொழி ஆகிய விவரங்களுடன் எழுதுக: செரிலாக், தபால் பை எண். 81, புதுதில்லி-110 001.

## உங்கள் குழந்தைக்கு அளியுங்கள் செரிலாக் அனுகூலம்

முக்கிய அறிவிப்பு: உங்கள் குழந்தைக்கு தாய்ப்பால் மிகவும் சிறந்தது. குழந்தைக்கு 4 மாதங்கள் ஆனதும் தாய்ப்பாலுடன் கூடவே தானிய உணவு வகைகளைக் கொடுங்கள்.

உங்களுக்கு குருமூர்த்தியைத் தெரியாது. அவனுக்கு முன் தலை வழுக்கை; மீசை கிடையாது என்று சொன்னால் தெரியவில்லை என்பீர்கள். 'அவனுடைய இன்னொரு பெயர் ஜெய பாஸ்கரன்' என்றால் அவன் முதல் படம் இது; அவனுடன் கதாநாயகிகளாய் நடித்தவர்கள் இத்தனை பேர்; அவனுடைய நூறாவது படம் இது என்று சொல்லும் அளவுக்கு அவன் உங்களுக்குப் பரிச்சயம்!

''குருமூர்த்தியைப் பார்த்துக் கேளுங்களேன்'' என்று வைதேகி சொன்ன போது,

''யாரு குருமூர்த்தி?'' என்றேன் நானும் உங்களைப் போலவே. என்னுடைய ஐம்பத்து ஏழாவது வயதில் குமாஸ்தாவாகவே இருந்த என்னை வீட்டுக்கு அனுப்பி விட்டார்கள். 'வெங்கடேசன் சார் மாதிரி கிடையாது, என்று மேலுக்குப் பாராட்டி, கழுத்தில் ஒரு ரோஜா மாலையும் போட்டு, யூனியன் கலெக்ஷன் தொகையில் ஒரு வெள்ளி விளக்குடன் - இரண்டு முட்டை எண்ணெய்தான் பிடிக்கும். ப்ராவிடன்ட் ஃபண்ட், க்ராஜுவிட்டி இவை எல்லாம் ஒரு மாதிரி கன்னா பின்னா எனச் செலவு பண்ணி முதல் பெண் கோமளத்தைக் கல்யாணம் பண்ணிய அலுப்பு தீர்வதற்குள் இரண்டாவது பெண் ஈதோ 'ராசாவே உன்னைக் காணாம நெஞ்சு' என்று பாட ஆரம்பித்து விட்டாள். ஏனைய சேமிப்புகளைத் திரட்டிப் பார்த்ததில் தாராளமாக இருபதாயிரம் வரை துண்டு விழுந்தது.

நெருங்கிய உறவினர்களிடம் பணம் இல்லை; பணக்கார உறவினர்களின் விலாசம் தெரியவில்லை.

ஏழு வரன்களில், பாட்டு பாடச் சொல்லி பயமுறுத்தாத வரன் சுரேஷ் வீட்டில் அதிகப்படியாக ஐந்து பவுன் போடச் சொன்னார்கள். 'யாருக்குச் செய்யப் போறேன்! எல்லாம் உங்க பொண்ணுக்குத் தானே!' எனத் தலைமுறை வசனத்தையே பையனின் அம்மா பேசி பயமுறுத்தினாலும் வைதேகிக்கு வரனை விட இஷ்டமில்லை. பையனுக்கு லக்னோவில் வேலை; பையனின் அப்பா அம்மா, பையனின் அண்ணன் வீட்டில் - மெட்ராஸில் இருக்கிறார்கள்; பையனுக்குத் தங்கை இல்லை போன்ற பல லட்சியப் புள்ளிகளைப் பட்டியலிட, இருபதாயிரம் குறுக்கே வந்தது. அப்போதுதான் வைதேகி குருமூர்த்தியை நினைவூட்டினாள்.

லியோ சினிமா கம்பெனியில் ப்ரொடக்ஷன் மானேஜரின் அசிஸ்டென்டாக வேலை பார்த்த என்னை, அப்பொழுது பிரபலமாகப் பாட்டெழுதிக் கொண்டிருந்த குத்தாலம் விஷ்ணு கூப்பிட்டு, சினிமா தொழிலைப் போல ஒரு கேவலமான பிழைப்பு கிடையாது என ஒரு மணி நேரம் பேசியதன் விளைவாக நான் காரைக்குடியில் ஒரு நாட்டுக் கோட்டை செட்டியார் நிறுவனத்தில் குமாஸ்தா வேலைக்கு மனு போட்டேன்.

அந்தக் கால கட்டத்தில் குருமூர்த்தி எனக்கு அறிமுகமானான். எப்பொழுதும் கையில் ஒரு டைரியும், தயார் நிலையில் நான்கு புகைப்படங்களும். கோடம்பாக்கத்தில் உள்ள பத்துக்கு எட்டடி சினிமாக் கம்பெனிகள் எல்லாம் அவனுக்குப் பழக்கம்.

படித்தவர்கள் என்றால் லியோ சலத்துக்கு மதிப்பு உண்டு. சலம் என்பது வெங்கடாசலம் என்பதன் சினிமா சுருக்கம். எனக்கு அளவுக்கு அதிகமாக ஆங்கில புஸ்தக அறிவு - கனான் டயல், இயான் ஃப்ளெமிங், அகதா கிறிஸ்டி இவர்களைத் தாண்டிய நிலை - உண்டென்பதால் லியோவில் வளர்க்கும் லீலாரிடம் உள்ளது போல் என்னிடமும் பிரியமாக இருந்தார்.

இதைத் தெரிந்து கொண்டு குருமூர்த்தி என் வீடு தேடி வந்தான்.

''ஒரே ஒரு சான்ஸ் வாங்கிக் கொடுங்க சார்.''

''என் கௌரவத்தை நான் இழக்க விரும்பவில்லை.''

''எனக்காக ஒருமுறை....''

''இழந்து விடுங்கள் என்கிறாயா?''

''நான் என்பது என் திறமை.''

''உன்னைப் போல தினம் நூறு பேர் சென்ட்ரலில் வந்து இறங்குகிறார்கள்.''

''இருக்காது.''

சொல்லி விட்டு நான்கு முன்னணிக் கதாநாயகர்களைப் போல வாய்ஸ் மாட்யுலேஷன் செய்து காட்டினான். எட்டு விதமான நடை நடந்து காட்டினான். பத்து விதமாகச் சிரித்துக் காண்பித்தான். ஆச்சரிய

# வாசல் வரை...



கழற்சிகளுடன் கோமளத்தின் ஒரு அடி ஸ்கேல் எடுத்து விஸ்ஸ் விஸ்ஸ் என்று கம்பு சுழற்றினான். வைதேகி திறந்த வாயை மூட அதிக நேரமானது.

''ஒரு வார்த்தை சலத்துக்கிட்ட சொல்லப்படாதா?'' என்றாள் மனைவி.

''அண்ணி!'' சட்டென்று சொந்தமான குருமூர்த்தி, ''சார் மட்டும் எனக்கு சான்ஸ் வாங்கிக் கொடுத்து, நானும் பெரிய ஹீரோவா ஆயிட்டா உங்களை எல்லாம் உயரமா தூக்கி வெச்சிடுவேன்.''

''கோடம்பாக்கத்தில் அதிகம் பேசப் படும் வசனம் இதுதான்.''

''இது சத்தியம்'' அவன் ஸ்வாமிப் படம் முன்னால் சத்தியமடித்ததில் 75 சத வீதம் சினிமாத்தனமே இருந்தது.

லியோ ப்ரொடக்ஷனின் புதிய படத்தில் இரண்டாவது கதாநாயகனுக்கு ஆள் தேடிக் கொண்டிருந்தார்கள். கல்லூரி மாணவன் ரோல். அந்தக் காலக்கட்டத்தில் நாற்பது வயது கடந்து, கண்களின் கீழ் கோழிச் சதை தெரியும் வயதான கதாநாயகர்களே கல்லூரி மாணவர்களாக நடித்துக் கொண்டிருந்தனர். லியோ இதை மாற்ற நினைத்தது. நான் குருமூர்த்தியைக் கொண்டு நிறுத்தினேன். வொர்க்-அவுட் பிரமாதமாக அமைய, குருமூர்த்தி ஜெயபாஸ்கரானான்.

சொன்னபடி லியோவின் முதல் மாதச் சம்பளத்துடன் கொஞ்சம் ஸ்வீட், கோமளாவுக்கு சாட்டினில் ஜிலு ஜிலு பாவாடை, இரண்டு நூறு ரூபாய் நோட்டுக்களுடன் எங்களைக் கிழக்கு பார்த்து நிற்க வைத்து நமஸ்காரம் செய்தான்.

அவனுடைய முதல் படம் ரிலீஸ் ஆவதற்குள் குத்தாலம் விஷ்ணு முற்றிலும் என் மனத்தை மாற்றி, காரைக்குடிக்கு அனுப்பி வைத்து விட்டார்.

இப்பொழுது இருபது வருடங்கள்

சத்தியப்ரியன்

கழித்து - மாம்பலத்தில் ஜெயபாஸ்கரன் வீட்டைக் கண்டுபிடித்து என்னை அறிமுகப் படுத்திக் கொண்டு, 'என் பொண்ணு கல் யாணத்துக்கு இருபதாயிரம் ரூபாய் கொடு' என்றால் எந்த வகையில் சேர்த்தி? வைதேகி நன்றி மறப்பது நன்றன்று எனத் திருக் குறளை எல்லாம் மேற்கோள் காட்டி சென் னைக்கு அனுப்பி வைத்தாள்.

மச்சினனிடம் ஜெயபாஸ்கரனைப் பார்க்கப் போவதாகச் சொல்லாமல் இலகு வான பொய் ஒன்றைச் சொல்லி, பஸ் பிடித்து ராஜகுமாரி தியேட்டர் ஸ்டாப்பில் இறங்கினேன். சென்னையில் உள் பிரதேசங் களில் சில பழகிய ஞாபக இடங்கள் இருந்த தால் ஜெயபாஸ்கரன் வீடு இருந்த தெரு வைக் கண்டு பிடிப்பது அத்தனைக் கடின மாக இல்லை.

கடவுளே! அவன் வெளியூர் ஷூட்டிங் போயிருக்கக் கூடாது. கூர்க்கா தொந்தரவு கூடாது.

கூர்க்கா என்னை அதிகம் தொந்தரவு கொடுக்காததால் புல்வெளிப் பாதை வழி யாக பங்களாவின் முன் முகப்பை அடை வது எளிதாகவே இருந்தது.

''யார் வேணும்?'' கேட்டுக் கொண்டு வந்தவன் பின்னால் ஒரு கறுப்பு நாயும் வந்து வினோதமாகக் குரைத்தது. பணக்கார அம்சம். ''கம்மா இரு ரோமி'' என்று அதட் டிய அவனுக்கு நாற்பது வயசுக்கு மேல் இருக்காது.

''யார் வேணும்?'' என்றான் திரும் பவும்.

''சார் இருக்காரா?'' என்றேன். என் னிடமும் போலித்தனம் ஒட்டிக் கொண்டு விட்டது.

''பெரியவரா? சின்னவரா? ஏன் என் றால் இப்பொ பெரியவர் பையனும் ஹீரோவா ஆக்ட் பண்ண ஆரம்பிச்சாச்சு.''

''குருமூர்த்தி சார்'' நான் வாய் தவறி சொன்ன வார்த்தைக்கு மாய மதிப்பு தெரிந் தது.

''பெரியவரா? அவரிடம் நீங்க யாருன்னு சொல்லட்டும்?''

''வெங்கடேசன்... வேணாம் வியோ வெங்கடேசன்னு சொல்லுங்க.''

அவன் முகத்தில் ஆச்சரியமான மாறு தல்கள் ஏற்பட்டன.

''வியோவின் 'குடும்பம்' படத்தில் ஜெயபாஸ்கரன் சாருக்கு முதல் பட சான்ஸ் வாங்கித் தந்த வெங்கடேசன் நீங்களா?''

''ஆமாம்.''

''உங்களைப் பார்க்க மாட்டோ மான்னு துடிக்கக்கிட்டிருக்கார்.''

''நிஜமாவா?''

> "மாப்பிள்ளை, என் பெண்ணை உங்களுக்குப் பிடிச்சிருக்கா...!"
> "எனக்குப் பூரண சம்மதம் மாமா!"
> "அப்படின்னா மசமசன்னு ஏன் நிக்கறீங்க? பெண்ணுக்குக் கூடமாட உதவி செஞ்சு பஜ்ஜி பலகாரங்களை எடுத்து வரது!"
> - குடியாத்தம் ஆர். ஹரிகோபி

''உட்காருங்க. நான் இதோ அவரை அழைக்கக்கிட்டு வர்றேன்.''

நான் சோஃபாவில் புதைந்தேன்.

என்னைக் காணத் துடித்துக் கொண் டிருக்கிறானா? ஏதோ ஒரு நிலையில் குரு மூர்த்தி நேர்மையாக இருப்பதால்தான் இந்த 25 வருஷ சாதனையா? இவன் இவ் வளவு பெரிய ஆளாக வருவதற்கு நான் எப்படிக் காரணமாவேன்? இவன் திறமை தானே காரணம்? கமிஷன் வாங்காத மிடில் மேன். இப்பொழுது கமிஷன் வாங்க வந் திருக்கிறேன். இதுவரை ஜெயபாஸ்கரன் மனத்தில் இருந்த வெங்கடேசன் சார், பீடம் விட்டு இறங்கி விடுவார்.

என் மனசில் லேசாக ஒரு உறுத்தல். எழுந்து போய் விடலாமா? அதற்குள் வர வேற்பறையின் உள்வாசல் திரை விலக, ஜெயபாஸ்கரன் வந்து நின்றான்.

பிரபலத்தின் பிரமைத் தோற்றம்! அரி தாரம் பூசிப் பூசி சிவந்த முகம். முற்றிலும் உதிர்ந்த முன் வழுக்கை. பாதி செம்பட்டை, பாதி வெள்ளையான, சாயத்துக்குட்பட்ட மீசை. பைஜாமா ஜிப்பா. கண்களில் நானும் அவனும் பழைய ஜெயபாஸ்கரனையும் பழைய வெங்கடேசன் சாரையும் பரஸ்பரம் தேடிக் கொண்டோம்.

''எப்படி சார் இருக்கீங்க?'' நடுங்கிய படி கேட்ட அவன் குரலில் கூட பழைய குரு மூர்த்தியைக் காணோம்.

என் அருகில் அவன் உட்கார எனக்குக் கூச்சமானது.

''எத்தனை வருஷம் வெங்கடேசன் சார்! எத்தனை வருஷம்! எவ்வளவு நாளா தேடியிருப்பேன்? இப்ப எங்க சார் இருக்கீங்க?''

''காரைக்குடியில்.''

அண்ணி எப்படி இருக்காங்க? சின்ன பாப்பா ஒண்ணு... கோகிலாதானே பேரு?''

அடே அப்பா! நான் மிகவும் ஆச்சரிய மானேன்.

''கோமளாவுக்குக் கல்யாணமாகி ஒரு பையன் இருக்கான்.''



''25 வருஷம் இல்லை...? வேற இஷ்யூஸ் உண்டா சார்?''

''இன்னொரு பொண்ணு ஒரு பையன்.''

''என்ன பண்றாங்க?''

''பொண்ணுக்குக் கல்யாண வயசு. பையன் பி.எஸ்ஸி பண்றான்.''

''வரன் பார்க்கறீங்களா?''

''அது விஷயமாத்தான் உன்னைப் பார்க்க வந்திருக்கேன்.''

''சொல்லுங்க.''

அதன் பிறகு ஒரு நிமிட மௌனம் ஏற்படுத்திய சங்கடம். நான் வந்த விஷயத்தைச் சொன்னேன்.

''என் கடமை சார். பன்னீர் செல்வம்! ரெடி கேஷ் எவ்வளவு இருக்கு? இருபத்தஞ்சாயிரம் இருக்குமா?''

''இல்லை சார். அஞ்சுதான் இருக்கும்.''

''பாங்க்குக்கு ஃபோன் போடு.''

''நாலு மணி ஆயிடுச்சு சார். தரமாட்டாங்க.''

''செக்கா கொடுக்கவா? வேணாம். சினிமாக்காரனைப் பத்தின அடிப்படை சந்தேகம் கூட என் மேல் விழக்கூடாது. உங்க அட்ரஸைக் கொடுங்க. நானே நேரில் வந்து.... வேணாம். நான் விளம்பரம் தேடிக் கொள்வது போலவும், உங்களை அவமானப்படுத்துவது போலவும் ஆயிடும். நாளைக்கு ஒருநாள் சிரமம் பார்க்காம இங்கே வர முடியுமா சார்?'' என்றான்.

''எத்தனை மணிக்கு வரட்டும்?''

''எத்தனை மணிக்கு வரச் சொல்ல பன்னீர்?''

''காலையில் ஏவிஎம்மில் ஷூட்டிங் ரெண்டு மணி வரை இருக்கு. மத்யானம் நாலுமணிக்கு வரச் சொல்லுங்களேன். அதற்குள் நான் பணம் வித்ட்ரா பண்ணி, தயார் நிலையில் இருப்பேன்.''

''ஓகே! பன்னீர் சொன்னது மாதிரி நாளை நாலு மணிக்கு வர முடியுமா சார்?''

''ஓ! வர்றேன்!''

''பன்னீர்! ட்ரைவரைக் கூப்பிட்டு சாரை தங்கியிருக்கும் இடத்தில் ட்ராப் பண்ணச் சொல்லு.''

''வேணாம் குரு! இந்த நிமிஷம் எனக்கு ஏற்பட்டிருக்கும் சந்தோஷத்தை சாவகாசமா அளக்க விரும்புகிறேன். மாருதியில் அதை ஃபாஸ்ட் ஃபார்வர்ட் பண்ணி விடாதே.''

**நா**ன் ஜெயபாஸ்கரன் வீட்டுக்குக் கிளம்ப ஆயத்தப்படுத்திக் கொண்டிருந்தேன். முதல் நாள் நடந்ததை விவரித்த போது அவநம்பிக்கை கண்களில் நடமிட கேட்டுக் கொண்டிருந்த மச்சினன், இப்போது வந்து சேர்ந்தான்.

''நிஜமாவே ஜெயபாஸ்கரனைப் பார்த்தீங்களா?''

''ஆமாம்.''

''பணம் தர்றேன்னு சொன்னானா?''

''ஆமாம்.''

''ஐ ஃபீல் வெரி பேட் அத்திம்பேர். இன்னிக்கு மார்னிங் ஷூட்டிங்கில் ஜெயபாஸ்கரன் மார்வலியில் செத்துப் போயிட்டானாம். ஊர் பூரா இன்னிக்கு இதுதான் பேச்சு.''

''இருக்காது சுந்தரம்.'' என் குரல் நடுங்கியது.

அவன் ட்ரான்ஸிஸ்டரை ஆன் பண்ண, நியூஸ் படித்தவர் செய்தியை வருத்தத்துடன் தெரிவித்துக் கொண்டார்.

என்னால் தாங்கவே முடியவில்லை.

''நாங்கள்ளாம் இல்லியா அத்திம்பேர்? ஜோரா கல்யாணத்தை ஜமாய்ச்சிடலாம்'' என்ற மச்சினனின் சமாதானத்துடன் மருதுபாண்டியரில் காரைக்குடி கிளம்பினேன்.

**ஜெ**யபாஸ்கரன் பங்களா. முன் முகப்பில் மேடை போட்டு அதன் மேல் பிரேதத்தை வைத்திருந்தார்கள். ஜெயபாஸ்கரன் மனைவிக்கும் மகன் மல்லிக்கிற்கும் பிரபலங்கள் க்யூவில் ஆறுதல் சொன்னார்கள். திரும்பிய இடமெல்லாம் காமெராக்கள் பளிச்சின. நிருபர்கள், ஸ்க்ரிப்ளிங் பேடும் பென்சிலுமாக எல்லா நடிகர்கள் முன்னாலும் போய் நின்றார்கள்.

''எப்போ பாடியை எடுக்கறாங்களாம்?''

''நைட்டு ஒன்பது மணிக்கு.''

''ஏன் அவ்வளவு லேட்டா?''

''ஜெயபாஸ்கரன் சாருக்கு ரொம்பத் தெரிஞ்ச ஒருத்தர் வரணுமாம். ஒரு சின்ன கணக்கு நேர் பண்ணணும் பொறுப்பு என் வசம் உள்ளது. அவர் வாராரான்னு பார்ப்போம். இல்லைன்னா ஒன்பது மணிக்கு எடுத்துடுவோம்.''

''அவர் பேர் என்ன?''

''வெங்கடேசன்.''

# கட்டபொம்மன்



ராம்பத் தெளிவான படம். யார் பார்க்கப் போகிறார்கள் என்ற தெளிவு. யோசிக்க வைக்கவில்லை. உணர்ச்சி துடிக்கும் மூன்று நான்கு சண்டைகள். ஒரு 'கிக்' பாட்டு. ஒரு 'புகழ்' பாட்டு. கொஞ்சம் காதல். தாலி செண்டிமெண்ட். கொலை. பழிவாங்கல். இறுதியில் சுபம், சுபம், சுபம்.

சரத்குமாருக்கு லைஃப். கோபத்திற்கு ஷாம்பூ முடி சிலிர்க்கிறது. தாடை விரிகிறது. ஆக்ஷன் ஹீரோ. அவ்வளவுதான். வினிதா ஜோடி. நடிக்க வருகிறது. ஒரு ரவுண்ட் வரலாம்.

தத்ரூபத் துக்கு நாகேஷ். கோபத்தில் மூக்கு மட்டும் ஆடுகிறது. ஸ்ரீவித்யா தாலியறுப்பது, 'சின்ன தம்பி' பொட்டு வைப்பதின் உல்டா. அண்ணனும் அம்மாவும் ஒப்புக்குச் சப்பாணி. கொசுறு விஜயகுமார்.

குட்டிக் குட்டி சந்துகள். உதை வாங்கிகள். ஹீரோ கைபட்டவுடன், காமிரா பார்த்து சிகப்புத் தண்ணீர் துப்புதல். அந்தர் பல்டி. ஆகாசப் பல்டி. பயங்கர உடான்ஸ்.

சொட்டைத் தலை, ஜிப்பாவென்றால் வில்லனா? தெற்கத்தித் தமிழ், தந்தைப் பாசம். பல்லி முட்டையாய்க் கண்ணை வேறு உருட்டுகிறார். அவருக்கேற்ற மகன். 'நே' பார்ட்டி. ஏற்ற இறக்க டைலாக்கில்தான் கொடூரம். டப்பிங் ஆர்ட்டிஸ்டுக்கு ஜே!

'எங்க தென்பாண்டி தேசத்து' டியூன் மட்டும் ஓ.கே. காளிதாசன் பாடல்கள். பத்தோடு பதினொன்று.

சொத்தை முடிவு. ஜோடியைச் சேர்க்க வில்லையென்றால் சோறு இறங்காதா? தமிழ் மரபு. பாடாவதி.

டைரக்டர் எல்லா ஸ்பேர்பார்ட்ஸையும் சேர்த்து என்ஜின் கட்டி விட்டார். ஹார்ஸ்பவரில் ஓடுமா, அம்போன்னு பூடுமா? பொறுத்திருந்தே பார்க்க வேண்டும்.

- துளசி

# ஹெல்த்

& Beauty

மருத்துவ மாத இதழ்

ஆசிரியர்:
எம்.ஜி.வல்லபன் எம்.ஏ.,

## மருந்துகளையும், மருத்துவர்களையும் தெரிந்து சொல்ல மாதம் ஒருமுறை மலரும் மருத்துவ இதழ்!



ஒருமுறை படித்துப் பாருங்கள் படித்தே தீர வேண்டுமென்ற பழக்கத்திற்கு அடிமையாகி விடுவீர்கள்

- குழந்தைகளின் நினைவாற்றலைப் பெருக்க மாத்திரைகள் உண்டா?
- உங்கள் உயரத்தை அதிகரிக்க முடியுமா?
- மாதவிலக்கு கால வலியைப் போக்க என்ன செய்யலாம்?
- தாய்ப்பாலை கண்ணில் ஊற்றலாமா?
- ஸ்வீட்ஸ் சாப்பிட்டால் சதை போடுமா?



இப்படி உங்கள் மனதில் தோன்றும் கேள்விகளுக்கு ஆதார பூர்வமான பதிலை ஒரு டாக்டரிடமிருந்து எதிர்பார்க்கலாம். அல்லது **ஹெல்த்** மருத்துவ மாத இதழ் படித்து தெரிந்து கொள்ளலாம்.

ஆண்டு சந்தா ரூ.60/- இன்றே அனுப்பி,
ஹெல்த் படிப்பதை பழக்கமாக்கிக் கொள்ளுங்கள்.

**படிக்கத் தவறாதீர்கள்**

பிலிமாலயா பப்ளிகேஷன்ஸ் 96, காம்தார் நகர், மகாலிங்கபுரம், சென்னை -600 034.

ஏஜெண்டு இல்லாத ஊர்களுக்கு ஏஜெண்டுகள் தேவை!

GTS AD VISION

# அமரர் கல்கி

# தியாக பூமி

**பா**வம்! சாவித்திரி, தன்னைப் புக்ககத்துக்கு அழைத்துப் போகாததன் காரணம், ஊரிலே தங்களைச் சாதிப் பிரஷ்டம் பண்ணி வைத்திருந்ததுதான் என்று நம்பியிருந்தாள். தலை தீபாவளிக்கு நாலு நாளைக்குப் பிறகு கல்கத்தாவிலிருந்து கடிதம் வந்தது. அதில், அந்த மாதிரிதான் எழுதியிருந்தது. ஊரார் அவர்களைச் சாதிப் பிரஷ்டம் செய்து வைத்திருப்பதாகச் செய்தி கிடைத்திருக்கிறதென்றும், சாஸ்திரியின் காரியங்கள் தங்களுக்கும் கட்டோடே பிடிக்கவில்லையென்றும், வீட்டிலே ஒரு பெண் இருக்கிறாளே என்பதை உத்தேசித்தாவது ஜாக்கிரதையாய் நடந்து கொள்ள வேண்டாமா என்றும், இத்தகைய நிலைமையில் தலை தீபாவளிக்கு வரப் பிடிக்காதபடியால் வரவில்லையென்றும் கடிதம் சொல்லிற்று.

இந்தக் கடிதம் வந்த பிறகு, சாவித்திரியின் ஏமாற்றமெல்லாம் ஊராரின் மேல் கோபமாக மாறிற்று. அவர்கள் ஏதோ இல்லாததும் பொல்லாததும் எழுதியிருக்க வேண்டுமென்றும், அதனால்தான் வரவில்லையென்றும், உண்மை விவரங்கள் தெரியும் போது மாப்பிள்ளையும் சம்பந்திகளும் தீபாவளிக்கு வராதது பற்றி வருத்தப்படுவார்களென்றும் அவள் எண்ணினாள். ஆகவே, அப்பாவை விவரமாகக் கடிதம் எழுதும்படி அடிக்கடி தூண்டிவாள். அவரும் எழுதினார். ஒரு தடவைக்கு இரண்டு தடவை, மூன்று தடவை எழுதினார். ஒன்றுக்காவது பதில் கிடையாது. பிராயச்சித்தம் செய்து கொண்டு ஊர்க் கட்டுப்பாடு நிவர்த்தியான பிறகு மறுபடியும் கடிதம் எழுதினர். அப்போதும் பதில் இல்லை.

சில நாளைக்குப் பிறகு, சாந்தி கல்யாணம் எப்போது வைத்துக் கொள்வதாக உத்தேசம் என்று கேட்டு எழுதியதற்கும் அதே கதிதான்.

ஒரு நாளைக்குச் சம்பு சாஸ்திரி, "அம்மா சாவித்திரி, நான் எத்தனையோ கடிதம் எழுதியாச்சு, ஒன்றும் பிரயோஜனம் இல்லை. நீயாவது உன் அகத்துக்காரருக்கு ஒரு கடிதம் எழுதிப் பாரம்மா!" என்றார்.

சாவித்திரியின் உள்ளத்தில் இந்த எண்ணம் வெகு நாளாக இருந்து கொண்டிருந்தது. தகப்பனாரே சொன்னதும், உடனே கடிதம் எழுதத் தொடங்கினாள். ஸ்ரீதரனிடம் தனக்குள்ள அன்பையும், இத்தனை காலமாக அவரைப் பாராததால் தான் அநுபவிக்கும் துக்கத்தையும், உடனே அவரை வந்து அடையத் தன் உள்ளம் துடித்துக் கொண்டிருப்பதையும், அவளால் முடிந்த வரையில் உருக்கமாக எழுதினாள்.

இந்தக் கடிதத்துக்கு உடனே பதில் வருமென்று சாவித்திரி நம்பினாள். தினந்தோறும் தபால்காரன் வரவை ஆவலுடன் எதிர்பார்த்தாள். இரண்டு வாரம் வரையில் பதில் வராமல் போகவே, ஒரு வேளை போய்ச் சேரவில்லையோ என்னவோ என்று மறுபடியும் எழுதினாள்.

இந்த மாதிரி ஏதாவது ஒரு காரணத்தைச் சொல்லி மனத்தைத் தேற்றிக் கொண்டு, சென்ற ஏழெட்டு மாதத்தில் பத்துக் கடிதங்கள் எழுதிவிட்டாள்.

ஆனால் பாவம், இந்தக் கடிதங்கள் எல்லாம் அவள் எதிர்பார்த்ததற்கு நேர் மாறான பலனை அளித்து வந்தன என்பது அவளுக்கு எப்படித் தெரியும்?

ஆம்; அவளுடைய கடிதம் ஒவ்வொன்றும் ஸ்ரீதரனுக்கு அவள்மேல் இருந்த வெறுப்பை அதிகப்படுத்தியே வந்தன. மேல் விலாசத்தில் அவளுடைய குழந்தைக் கையெழுத்தைப் பார்த்ததுமே அவனுக்குக் கோபம் கோபமாய் வரும். 'ஐயோ! இந்தப் பிராப்தத்தைக் கொண்டு வந்து என் கழுத்திலா கட்ட வேண்டும்?' என்று எண்ணுவான். யாராவது பார்த்துவிடப் போகிறார்களே என்ற பயத்துடன், கடிதத்தை அவசர அவசரமாகப் பார்த்துவிட்டு, சில சமயம் படிக்காமலேயே, சுக்கு நூறாய்க் கிழித்துப் போட்டு விடுவான். சாவித்திரியின் கடிதங்களில் அவள் காட்டியிருந்த விநயம், பய பக்தி, உருக்கம்



எல்லாம் அவன் மனத்தில் அருவருப்பையே உண்டாக்கின.

இதையறியாத சாவித்திரி மேலும் மேலும் மேலும் கடிதம் எழுதிப் போட்டுக் கொண்டேயிருந்தாள். சம்பு சாஸ்திரியும் சலிக்காமல், அம்பாளை வேண்டிக் கொண்டு, அவளுடைய கடிதங்களைத் தபாலில் சேர்த்து வந்தார்.

கடைசியாக சாவித்திரி இன்றைய தினம் கடிதம் எழுத ஆரம்பித்த போது, இது தான் அவருக்கு நாம் எழுதும் கடைசிக் கடிதம் என்று தீர்மானித்துக் கொண்டாள். மேஜையின் மீதிருந்த 'செல்லுலாயிட்' பொம்மையைப் பார்த்த வண்ணம், ''பாப்பா!! இந்தக் கடிதத்துக்காவது அவாவிடமிருந்து பதில் வந்தால் போச்சு! இல்லாமற் போனால், நான் கிணத்திலே குளத்திலே விழுந்து செத்துப் போயிடுவேன். அப்புறம் உன்னோடு யார் விளையாடுவார்கள்?'' என்று மனத்திற்குள் சொல்லிக் கொண்டாள். அப்போது, தான் மூன்று வயதிலே கிணற்றில் விழுந்ததாக அப்பா சொன்னது ஞாபகம் வந்தது. 'ஐயோ!! அப்போதே நான் செத்துப் போயிருக்கக் கூடாதா? பாவி நல்லான் எதற்காக என்னை எடுத்தான்?' என்று நினைத்துப் பெருமூச்சு விட்டாள். பிறகு, மனத்தைத் திடப்படுத்திக் கொண்டு, ஒருவாறு கடிதத்தை எழுதி முடித்தாள்.

அந்தச் சமயத்தில் சம்பு சாஸ்திரி,



## அருள்வாக்கு

தெய்வ சக்திக்கு மநுஷ சக்தி குறைவானதுதான். தேவர்களை விட மனிதர்கள் சக்தியில் குறைந்தவர்கள்தான். ஆனாலும் மநுஷ்யர்கள் தங்களைப் பற்றி நினைத்துக் கொண்டிருக்கிற அளவுக்கு அல்ப சக்தர்களில்லை. இந்த்ரிய நிக்ரஹம் செய்து சுத்தமாக வாழ்க்கை நடத்தினால் மநுஷ்யர்களும் எவ்வளவோ சக்தியுடன் கார்யங்கள் செய்யலாம். யோகேச்வரர்களாகப் போனால் தேவர்களைப் போலவும், அவர்களை விடவும் கூட சக்தியை ஸம்பாதித்துக் கொள்ளலாம். தங்களைப் பற்றி ரொம்பக் குறைவாக நினைத்துக் கொண்டிருக்கும் மநுஷ்யர்களுக்கு, 'தாங்களும் இத்தனை சக்தர்களாக, இப்படியிப்படிப் பெரிய கார்யங்களைப் பண்ண முடியும்' என்ற நம்பிக்கையையும் உத்ஸாஹத்தையும் ஊட்டுவதற்காகவும் பகவான், பகவானாகவே இருந்து கொண்டு தர்ம ஸம்ஸ்தாபனம் பண்ணாமல் மநுஷ்யனாக வந்து பண்ணுகிறான்.

– ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய சுவாமிகள்.

''அம்மா, சாவித்திரி! உன் கலி தீர்ந்து விட்டது அம்மா!'' என்று சொல்லிக் கொண்டே உள்ளே வந்தார்.

### 23. சதியாலோசனை

ராஜாராமய்யரும் அவருடைய நண்பர்களும் நடத்திய ஆவி உலகச் சோதனை அகால மரணத்துக்கு உள்ளான விஷயத்தை நாம் துயரத்துடன் தெரிவிக்க வேண்டியதாயிருக்கிறது. மேஜை ஒரு முழ உயரம் கிளம்பியதற்கு மேல் அவர்களுடைய சோதனையில் வேறு எவ்விதப் பலனும் ஏற்படவில்லை. ஆகவே, எல்லோரும் ஒருவாறு சலிப்பு அடையும் தருணத்தில், இங்கிலாந்திலிருந்து மிஸ் மேரியா ஹாரிஸன் என்னும் பெண்மணி வந்து சேர்ந்தாள். இவள் ஒரு பிரசித்தி பெற்ற 'மீடியம்'; அதாவது, ஆவி உலகவாசிகளைத் தன்னுடைய தேகத்தின் மீது ஆவிர்ப்பவிக்கச் செய்யக்கூடிய சக்தி வாய்ந்தவள். ராஜாராமய்யர் - பீடர்ஸன் சங்கத்தார் இந்த 'மீடியம்' அம்மாளுக்கு வரவேற்பு அளித்தார்கள். இவர்களுடைய ஆராய்ச்சியில் அந்த அம்மாள் மிகவும் சிரத்தை காட்டி, தானே அவர்களுக்கு உதவி செய்வதாகவும் சொன்னாள்.

பலநாள் முயற்சிக்குப் பிறகு ஒரு நாளைக்கு அந்த அம்மாள் தன்னுடைய வாக்குறுதியை நிறைவேற்றக்கூடிய நிலைமை ஏற்பட்டது. அதாவது, அவள் பேரில் ஆவிகள் ஆவிர்ப்பவித்து, கேட்ட கேள்விகளுக்குப் பதில் சொல்லலாயின. ஆனால், பதில் வாயினால் சொல்லவில்லை; 'மீடிய'த்தின் கையைப் பிடித்துப் பதில்களை எழுதிக் காட்டின.

முதலில், மிஸஸ் பீடர்ஸனுடைய ஆவி ஆவிர்ப்பவமாயிற்று. பீடர்ஸன் துரை பூலோகத்தில் தங்களுடைய வாழ்க்கையைப் பற்றிக் கேட்டதற்கு, ''அதெல்லாம் எனக்கு மறந்து போய்விட்டது; இந்த உலகத்துக்கு வந்த பிறகு பூலோக விஷயங்கள் ஒன்றும் ஞாபகம் இருப்பதில்லை'' என்று ஆவி சொல்லிற்று. பிறகு, தான் இருக்கும் உலகம் அற்புதமான அழகு வாய்ந்தது என்றும், எங்கே பார்த்தாலும் புஷ்பக் காட்சியாயிருக்கிறது என்றும், வானவில்லின் வர்ணங்கள் எங்கும் காணப்படுகின்றன என்றும், எப்போதும் சுகந்தம் வீசுகிறது என்றும், இப்படிப்பட்ட ஆச்சரிய உலகத்துக்குப் பீடர்ஸன் துரையும் சீக்கிரத்தில் வந்து சேர வேண்டுமென்றும் எழுதித் தெரிவித்தது.

இந்த எழுத்து ஒருவாறு தம் மனைவியின் கையெழுத்தைப் போல் இருக்கிறதென்றும் பீடர்ஸன் துரை சொன்னார்.

பிறகு, ராஜாராமய்யருடைய தகப்பனார், 'மீடியம்' அம்மாளின் மீது ஆவிர்ப்பவித்தார். அவர் எழுதிய கையெழுத்து மிஸஸ் பீடர்ஸனின் எழுத்துக்கு முற்றும் மாறாக, ஆண் பிள்ளைக் கையெழுத்தைப் போல் இருந்தது. இதைப் பார்த்ததுமே அங்கே கூடியிருந்தவர்களெல்லாம் அதிசயப்பட்டுப் போனார்கள். ஆனால் ராஜாராமய்யருக்கு அதைவிட ஆச்சரியம் அளித்தது என்னவென்றால், தம்முடைய தகப்பனார் ஓர் அட்சரங்கூட இங்கிலீஷ் தெரியாதவராயிருந்தும், இப்போது இவ்வளவு சுத்தமான இங்கிலீஷ் எப்படி எழுதுகிறார் என்பதுதான். மேலும், வைத்தீகவரய்யர் தாம் வசிக்கும் உலகத்தைப் பற்றி வர்ணித்ததும், மிஸஸ் பீடர்ஸன் வர்ணித்ததும், ஏறக்குறைய ஒரு மாதிரியாகத்தான் இருந்தது. மேலும் அவர், ''இந்த உலகத்தில் சாதி, மத வித்தியாசம் ஒன்றும் கிடையாது. கிறிஸ்தவர்களும், ஹிந்துக்களும் ஒன்றுதான். எல்லாரும் பர மண்டலத்திலுள்ள ஏக பிதாவைத்தான் வணங்குகிறோம்'' என்றார். தம் தகப்பனார் உயிர் வாழ்ந்தபோது, அவர் கிறிஸ்தவர்களைப் பற்றி எவ்வளவு கேவலமாக நினைத்தார் என்பது ராஜாராமய்யருக்கு ஞாபகம் வந்தபோது, பரலோகத்தில் அவருடைய மாறுதல் ஆச்சரியமாய்த்தான் இருந்தது. ஆனால் இது எல்லாவற்றையும் விட அவரை அதிசயத்தினால் திகைக்கப் பண்ணிய விஷயம் வேறொன்று: ''வருஷாவருஷம் நான் தங்களை உத்தேசித்து சிராத்தம் பண்ணுகிறேனே, அன்று தாங்கள் பூலோகத்துக்கு வருவதுண்டா?'' என்று ராஜாராமய்யர் கேட்டதற்கு, வைத்தீகவரய்யரின் ஆவி எழுதிய பதிலாவது :- ''ஆமாம்; வருஷம் ஒரு தடவை நான் என்னுடைய கல்லறைக்கு வருகிறேன். அங்கே நீ போட்டிருக்கும் புஷ்பங்களின் சுகந்தத்தை உட்கொண்டுவிட்டுத் திரும்புகிறேன்!''

ராஜாராமய்யர் தம் தகப்பனாரின் உடலுக்குக் கொள்ளி வைத்துக் கொளுத்தியதுமல்லாமல், அவருடைய எலும்புகளைப் பயபக்தியுடன் கொண்டு போய்க் கங்கையில் போட்டு விட்டு வந்தவர். எனவே, அவருடைய தகப்பனாரின் ஆவி, ''என்னுடைய கல்லறைக்கு வருகிறேன்'' என்று சொன்னதும், ராஜாராமய்யருக்கு அளவில்லாத வியப்பு உண்டாயிற்று. அதை நினைக்க நினைக்க, இந்த ஆவி உலகச் சோதனையிலே அவருடைய நம்பிக்கை சிதறுண்டு போயிற்று.

இதற்கு நேர்மாறாக, பீடர்ஸன் துரையின் நம்பிக்கை அதிகமாயிற்று. அவர் தம்முடைய மனைவி வசிக்கும் உலகத்துக்குத் தாமும் சீக்கிரம் போக வேண்டுமென்றும் அதற்கு முன்னால் தமது ஜன்ம தேசத்தையும் ஒரு தடவை பார்த்து விட வேண்டுமென்றும் தீர்மானித்து, உத்தியோகத்திலிருந்து விலகிச் சீமைக்குப் பிரயாணமானார்.

அவர் போன பிறகு, ராஜாராமய்யரின் ஆவி உலக ஆராய்ச்சியும் சமாப்தி அடைந்தது.

இப்போது ராஜாராமய்யர் தமது முழுக் கவனத்தையும் மனோதத்துவ ஆராய்ச்சியில் செலுத்தியிருந்தார். ஹிப்னாடிஸம் என்கிற மனோவசியம், டெலிபதி என்கிற மானஸத் தந்தி ஆகிய கலைகளைப் பற்றி ஏராளமான நூல்களைப் படித்தார். அந்த அப்பியாசங்களைச் செய்வதற்குப் பூர்வாங்கமாக இப்போது காந்த சக்தி தேடிக் கொள்வதில் ஈடுபட்டிருந்தார். தமது அறையின் ஒரு சுவரில், வட்ட வடிவமான ஒரு பெரிய கறுப்புப் புள்ளியை எழுதிக் கொண்டு, அதைக் கண் கொட்டாமல் உற்றுப் பார்த்த வண்ணம், ''இதோ என் கண்கள் காந்தசக்தி பெற்றுவிட்டன'' என்று ஜபிப்பார்.

பிறகு, கண்களை மூடிக்கொண்டு, ''இதோ எனக்குக் காந்த சக்தி உண்டாகிறது. என்னைச் சுற்றிலுமுள்ளவர்கள் எனக்குக் கட்டுப்படுகிறார்கள். நான் எது சொன்னாலும் உடனே கேட்கிறார்கள். ஸ்ரீதரா! நான் கட்டளையிடுகிறேன்; நீ தூங்கப் படிக்கிறாய்! தங்கம்! நான் சொல்கிறேன்; நீ கேட்கிறாய்!'' என்று இந்த மாதிரி திருப்பித் திருப்பிச் சொல்வார்.

இவ்வாறு ஒருநாள் சாயங்காலம் அவர் மாடி அறையில் காந்த சக்தி அப்பியாசத்தில் ஈடுபட்டிருக்கும் போதுதான், வாசலில் கார் வந்து நின்று பலமாக ஹாரன் அடிக்கும் சப்தம் கேட்டது. ராஜாராமய்யர் தமது அப்பியாசத்தை நிறுத்தி ஜன்னல் பக்கமாக வந்து

''பினாட் வாங்கினால் லாரி டியூப் தர்றாங்களே, எதுக்குன்னு கேட்டியே, இப்ப தெரிஞ்சுதா?''

- வேதபுரி ரமேஷ்.





சவூதி அரேபியாவில் ஒரு லிட்டர் குடிநீரின் விலை இரண்டு ரியால் (17 ரூபாய்). ஆனால் அந்த இரண்டு ரியால் கொடுத்தால் ஆறு லிட்டர் பெட்ரோல் கிடைக்கும்!

செய்தி : சவூதி கெஸட்
தகவல் : ஆர். சசீதரன்

---

பார்த்தார்.

வாசலில், ஒரு 'ஸ்போர்ட்ஸ் மாடல் கார்' நின்றது. அதில், டிரைவரின் ஸ்தானத்தில் ஸ்ரீதரன் உட்கார்ந்திருந்தான். அவனுக்கு அருகில், லைலி அமர்ந்திருந்தாள். அப்போது வீட்டுக்குள்ளிருந்து வேலைக்காரன் வரவே, ஸ்ரீதரன் அவனிடம் தான் ஆபீஸுக்குக் கொண்டு போகும் கைப்பெட்டியைத் தூக்கிக் கொடுத்தான். உடனே, வண்டி விர்ரென்று கிளம்பிப் போய்விட்டது.

ராஜாராமய்யருக்கு இது ஒன்றும் அதிசயம் அளிக்கவில்லை. ஏனென்றால், தீபாவளியின் போது ஸ்ரீதரன் கூட்டிக் கொண்டு வந்த சிநேகிதன் உண்மையில் சிநேகிதி என்பது சீக்கிரத்திலேயே தெரிந்து போயிற்று. தகப்பனாரும் தாயாரும் எவ்வளவு புத்தி சொல்லியும் பயன்படவில்லை. அதைப் பற்றிப் பேச்சு எடுத்தால் ஸ்ரீதரன் உடனே, "நீங்கள் என் சம்மதத்தைக் கேளாமல் பலவந்தமாக ஏன் கல்யாணம் பண்ணி வைத்தீர்கள்? நான் என் இஷ்டம் போல்தான் இருப்பேன்" என்று ஒரே அடியாய் அடித்துவிட்டுப் போய் விடுவான்.

ஸ்ரீதரனை எப்படி நல்ல வழிக்குத் திருப்புவது என்று ராஜாராமய்யர், தங்கம்மாள் இரண்டு பேருக்கும் ஒரே கவலையாயிருந்தது.

ராஜாராமய்யர் முக்கியமாக அதற்காகவே காந்த சக்தி சம்பாதிக்கும் அப்பியாசத்தில் ஈடுபட்டிருந்தார். தங்கம்மாளும் தனக்குத் தெரிந்த வழியில் என்னவெல்லாமோ யோசனை செய்து கொண்டிருந்தாள்.

இன்று சாயங்காலம், ஸ்ரீதரன் வாசலில் நின்றுவிட்டு, வீட்டுக்குள் வராமல் கூடப் போய்விட்டதும், தங்கம்மாள் மேலே ராஜாராமய்யரைத் தேடிக் கொண்டு வந்தாள்.

"ஏன்னா? இப்படி எத்தனை நாளைக்கு இந்தப் 'பிள்ளையைக் கேள்வி முறையில்லாமே விட்டிருக்கிறது? நீங்களும் ஒரு புருஷாள்னு உட்கார்ந்துண்டு எல்லாத்தையும் பாத்திண்டிருக் கயளே?" என்றாள்.

"அதுக்கு என்னை என்ன பண்ணச் சொல்றே! அவனவன் அப்பா பிள்ளையாயிருந்தான்னா நான் சொன்னத்தைக் கேட்பான். ஆரம்பத்திலிருந்தே அவனை அம்மா பிள்ளையாப் பண்ணியாச்சு! இப்ப முட்டிண்டு என்ன பிரயோஜனம்?"

"நான் ஒன்றும் இப்ப முட்டிக்கலை. அப்பவே கூடத்தான் முட்டிண்டேன். கல்கத்தாவிலே நாம் இருந்து வாழ்ந்ததெல்லாம் போதும், குழந்தைக்காவது நம்ம பக்கத்திலே வேலை பண்ணி வைங்கோன்னு சொல்லேன். கேட்டாத்தானே?"

"ஆமாம்; நம்ம பக்கத்திலே உன் பிள்ளைக்கு உத்தியோகம் கொடுக்கிறேன், கொடுக்கிறேன்னு காத்துண்டிருந்தா - நான் வேண்டான்னுட்டேனாக்கும்! உத்தியோகந்தான் போகட்டும்; நம்ம ஊர்ப் பக்கமாப் பார்த்து நீ கல்யாணம் பண்ணிவச்சயே? அது என்ன ஆச்சு?"

"எல்லாம் சரியாத்தான் ஆச்சு. கல்யாணம் பண்ணிவறதிலே என்ன குறைவாப் போச்சு? நான் ஊருக்குப் போய் மூவாயிரம் ரூபாயோடே அந்தப் பொண்ணை அழைச்சுண்டு வராமல் போனா, என் பெயர் தங்கம்மா இல்லை!"

"குஷாலாய்ப் போய் அழைச்சுண்டு வா! பிள்ளையோடே மல்யுத்தம் பண்ணு!"

"மல்யுத்தம் பண்ணுவானேன்? மாட்டுப்பொண் வந்துட்டா, இவனுக்கு இந்தச் சட்டைக்காரிப் பைத்தியம் கட்டாயம் போயிடும். நீங்க மட்டும் இவன் கிட்ட இப்போ ஒண்ணும் சொல்லி வைக்காதேங்கோ!"

"நான் என்னத்துக்குச் சொல்றேன்? பைத்தியமா?"

"இந்த மாதிரி நான் நரசிங்கபுரத்துக்கு வர்றேன், அங்கே வந்து என்னைப் பார்க்கறதுன்னுட்டு, சம்பு சாஸ்திரிக்கு ஒரு கடுதாசி எழுதுங்கோ."

"அது மட்டும் என்னாலே முடியாது. நீயாச்சு, உன் பிள்ளையாச்சு, மாட்டுப் பொண்ணாச்சு! எப்படியாவது போங்கோ!"

ராஜாராமய்யருடைய பிடிவாதத்தை அறிந்திருந்த தங்கம்மாள், அதே தெருவில் குடியிருந்த இன்னொரு தமிழ் நாட்டுக் குடும்பத்தைச் சேர்ந்த பையனை அழைத்துக் கொண்டு வந்து சம்பு சாஸ்திரிக்குக் கடிதம் எழுதச் செய்தாள். தான் சீக்கிரத்தில் நரசிங்கபுரத்துக்கு வருவதாகவும் மாட்டுப் பெண்ணைக் கல்கத்தாவுக்குக் கூட்டிக் கொண்டு போகும் உத்தேசம் இருக்கிறதென்றும், ஆனால் சம்பு சாஸ்திரி முதலில் நரசிங்கபுரத்திற்கு வந்து தன்னைப் பார்த்தால் நேரில் எல்லாத் தகவலும் தெரிவிப்பதாகவும் எழுதுவித்துத் தபாலிலும் போட்டாள்.

(தொடரும்)

உலகின் ஒப்பற்ற காதல் நினைவுச் சின்னமாகப் போற்றப்படும் தாஜ்மஹால் மெல்ல வெண்மை நிறம் மாறி, பழுப்பேறிக் கொண்டிருக்கிறது. 20,000 பேரின் 22 ஆண்டு உழைப்புக்குச் சாட்சியாக நிற்கும் இந்த அரிய கலைப் பொக்கிஷம், மெல்ல அதன் அழகையும் கம்பீரத்தையும் இழக்கும் அபாயத்தில் இருக்கிறது. ஆக்ரா நகருக்கு அருகே இருக்கும் மதுரா எண்ணெய் சுத்திகரிப்பு ஆலையிலிருந்து வெளியேறும் புகையே இதற்குக் காரணம் என்று முன்னர் சொல்லப்பட்டது. ஆனால் இந்த ஒரு ஆலை மட்டுமல்ல; ஆக்ரா புறநகர்ப் பகுதியில் இருக்கும் இரண்டாயிரத்துக்கும் மேற்பட்ட சிறிய உருக்காலைகள், கண்ணாடிச் சாதனங்கள் தயாரிக்கும் தொழிற்சாலைகள் ஆகியன வெளியேற்றும் கழிவு வாயுக்களும் பெரும் பாதிப்பை ஏற்படுத்திக் கொண்டிருக்கின்றனவென்பது தற்போது உணரப்பட்டிருக்கிறது. ஆக்ராவிலிருந்து 25 கி.மீ. தூரத்தில் இருக்கும் பெரோஸாபாத் என்ற சின்ன நகரத்தில் மட்டுமே 300க்கும் மேற்பட்ட இரும்பு உருக்கும்

# அழுகிறது தாஜ்மஹால்!



தொழிற்சாலைகள் உள்ளன. நகருக்குள் நுழையும்போதே எரியும் கந்தகத்தின் மணம் நாசியைத் தாக்குகிறது. சுற்றுப்புறத்தின் உஷ்ணத்தை உணர முடிகிறது. இந்தத் தொழிற்சாலைகளும், எண்ணற்ற கண்ணாடித் தொழிற்சாலைகளும் ஒரு நாளைக்கு எரிபொருளாகப் பயன்படுத்துவது 10,000 டன் நிலக்கரி. இது சுமார் 40 டன் சல்பர்-டை-ஆக்ஸைடைக் கக்குகிறது. இதில் ஒரு பகுதி அருகிலுள்ள தாஜ்மஹாலின் மீது தினசரி படிந்து கொண்டிருக்கிறது.

“இந்த எரியும் உலையில் சிக்கி தாஜ்மஹால் என்ற மலர் கருகிப் போய் விடாமல் காப்பாற்ற அரசுக்கு ஆணையிடுங்கள்” என்று சுப்ரீம் கோர்ட்டில் வழக்குத் தொடர்ந்து, பத்து ஆண்டு போராட்டத்துக்குப் பின்னர் வெற்றி கண்டிருப்பவர் எம்.ஸி. மேத்தா என்ற வழக்கறிஞர். “இந்த ஆலைகளிலிருந்து வெளியேறும் புகையில் மாசுக் கட்டுப்படுத்தும் சாதனங்களைப் பொருத்த வேண்டும்; அல்லது ஆலைகளை மூடி விட வேண்டும். இவற்றைக் கண்காணிக்க மாநில அரசு, வாரியம் ஒன்றை நிறுவ வேண்டும்” என்று சுப்ரீம் கோர்ட் ஆணையிட்டிருக்கிறது.




“சுப்ரீம் கோர்ட் ஆணையை மாநில அரசு மதிக்கவேயில்லை” என்கிறார் மேத்தா. நிறுவப்பட்டிருக்கும் வாரியம் நிதி நிலைமையைக் காரணம் காட்டி தொழிலகத்திலிருந்து வெளியேறும் மாசுகளின் அளவைக் கணக்கிடும் கருவிகளை வாங்கவில்லை. மாசுக் கட்டுப்பாட்டுச் சாதனங்கள் வைத்திருக்கும் தனியார் நிறுவனங்களை அங்கீகரித்து விட்டு, அவர்களே தரும் அறிக்கையின் அடிப்படையில் சான்றிதழ்கள் வழங்கப்படுகின்றன. மாசுக் கட்டுப்பாடு சரியான முறையில் நடக்கிறதா என்று நிர்ணயிக்கும் தகுதி வாரியத்துக்கு இல்லை. “இந்தத் தாஜ்மஹால் முன்னொரு காலத்தில் வெள்ளை வெளேர் என்றிருந்தது என்று வருங்காலத்தில் நம் குழந்தைகளுக்குக் கதை சொல்லப் போகிறோம்” என்கிறார் மேத்தா.

சுற்றுலா வரும் மக்களாலும் இந்த அழகிய சின்னத்துக்குப் பாதிப்பு ஏற்பட்டுக் கொண்டிருக்கிறது. குறைந்தபட்சம் ஆண்டுக்கு இருபது லட்சம் பேர் பார்த்துப் போகும் இந்தப் பளிங்குச் சின்னத்தைத் தொட்டுப் பார்த்து ரசிப்பவர் பலர். இதனால் ஒரு குறிப்பிட்ட உயரத்துக்கு சுவர்கள் பிசுக்கு ஏறி அழுக்காகிக் கொண்டே இருக்கின்றன. பல இடங்களில் கீறல்கள் வேறு. எதிரொலி கேட்கும் ஆவலில், பலர் போடும் கூச்சலினால் வயதாகிக் கொண்டிருக்கும் இந்தக் கட்டடத்தின் உள் கூரை அடிக்கடி அதிர்வுக்கு உள்ளாகிறது. இது, இருக்கும் சில மயிரிழை வெடிப்புகளைப் பெரிதாக்கி விடும் அபாயம் உண்டு.

சமீபத்தில் இங்கு வந்த மத்திய அரசின் சுற்றுலா அமைச்சர் குலாம்நபி ஆசாத் இந்த நிலைமையைக் கண்டு அதிர்ந்து, சுத்திகரிக்கும் பணிக்கு உடனடியாக ஆணையிட்டு இருக்கிறார். பெருமளவு நிதி ஒதுக்கப்பட்டு பணியும் துவங்கி இருக்கிறது.

“இது அவ்வளவு எளிதான வேலை இல்லை” என்கிறார் ராஜேந்திரா. இவர் இந்தியத் தொல்பொருள் சொஸைட்டியின் நிபுணர். “ரசாயனப் பொருள்களைப் பயன்படுத்திப் பளிங்குக் கற்களைச் சுத்தம் செய்வதில் முழு வெற்றி கிடைப்பது கடினம். மேலும் பளிங்குப் பலகைகளில் இலையுடன் கூடிய பூக்களை வடிவமைக்கும் சிற்ப வேலைகளைச் செய்யக்கூடியவர்கள் இப்போது இல்லை” என்று சொல்லும் இவர், தாஜ்மஹாலைத் தொடாமல் வெளியிலிருந்து பார்த்து ரசிக்கும்படியாக மக்களைக் கட்டுப்படுத்துவது நல்லது என்று கருதுகிறார்.

“கலர் மாறுவது மட்டுமல்ல. கட்டடமே மெல்லப் புதைந்து கொண்டிருக்கிறது” என்று ஒரு குண்டைத் தூக்கிப் போட்டிருக்கிறார்கள், ரூர்கி பல்கலைக் கழகக் கட்டடக் கலை மாணவர்கள். “கட்டடத்தின் வடக்குப்புற யமுனை நதிக் கரைப் பகுதியில் கட்டடம் மூன்று அங்குலம் வரை ஏற்கெனவே கீழிறங்கி விட்டது. அதனால்தான் அந்தப் பகுதியில் இருக்கும் ஒரு மினார் (தூண்கோபுரம்) உயரம் குறைந்து காணப்படுகிறது” என்று ஆராய்ந்து அரசுக்கு அறிக்கை தந்திருக்கிறார்கள். நிபுணர் குழுவின் பரிசீலனைக்கு இந்த அறிக்கை அனுப்பப்பட்டுள்ளது.

இந்தியாவுக்கு வரும் அயல்நாட்டுப் பயணிகளில் 95 சதவீதத்தினர் தாஜ்மஹால் பார்க்கவே வருகின்றனர். உடனடியாகத் தாஜ்மகாலை அழிவிலிருந்து காப்பாற்ற முயற்சி மேற்கொள்ளாவிட்டால் தாஜ்மஹால் அழுக்கேறி ஒளி குன்றுவது போல் நாளடைவில் இந்தியச் சுற்றுலா வளர்ச்சியும் மங்கிப் படுத்து விடும்.

– ரமணன்




நாளையிலிருந்து குப்பம்மா VS சுப்பம்மா வழங்கும்
'குழாயடி குடுமிப் பிடி'
மீண்டும் ஆரம்பம்!
காணத் தவறாதீர்!





"தலைவர் புத்தியச
டாருப்பா!"
"எப்படிச் சொல்றே
"தண்ணி லாரி
வருது; வாங்கிக்கறீங
கேட்டா, எத்தனை 'மில
கும்னு கேக்கறாரே!"

"தலைவரே! தண்ணி லாரி சப்ளை யெல்லாம், நின்னுடுச்சு. கையை ரொம்பக் கடிக்குமே..."
"தண்ணி லாரி கான்ட்ராக்ட் இல்லாட்டி என்ன, லாரி ஓடின ரோடெல்லாம் ரிப்பேர் பண்ற கான்ட் ராக்டைப் புடிச்சுட்டனே!"





"வீட்டுப் பம்புலதான்
வருதே, இவ ஏன்
இருக்கா?"
"தண்ணி லாரி டி
நேத்துதான் காதலிக்க
பிச்சாளாம்!"




எமன் : எங்கே என் வாகனம்?
சித்ரகுப்தன் : ஸ்ட்ரைக் பண்ணுது!
எமன் : ஏன்? ஏன்?
சித்ரகுப்தன் : நேத்து வரை, 'தண்ணி லாரிதான் எனக்கு வாகனம்'னு சொல்லிக் கிட்டு ஜாலி ரைட் போனீங்களாம்; இப்ப மறுபடி 'எருமையைக் கொண்டா'ன்றீங்க ளாம். 'எனக்குத் தன்மானம் இல்லை யா'ன்னு கேட்குது!


''தண்ணி சப்ளை நின்னதுல ஓனருங் களுக்குத்தான் ரொம்பக் கஷ்டம்!''
''ஏன்?''
''இனிமே லாரியை தினம் கழு வணுமே!''


''ரொம்பத்தான் கர்வப்பட்டுக்க வேண்டாம்! உன் ஆட்டமெல் லாம் இன்னும் ஆறே மாசத்துக் குத்தான்!''
குடிநீர்



இந்திய கிரிக்கெட் அணியில் 'பெரிசு'கள் வீட்டுக்குப் போக ஆரம்பித்து விட்டார்கள். ஓட்டிக் கொண்டிருக்கும் கபிலும் கூட, கூடிய சீக்கிரம் கழன்டு கொள்ளும் (அல்லது கழற்றி விடப்படும்) சாத்தியக்கூறுகள் சமீபத்திய ஹீரோ கோப்பைப் போட்டிகளில் தெரிய ஆரம்பித்திருக்கின்றன.

இது பொடியர்களின் காலம். அவர்களின் கோலோச்சல் வாவளாவ விரிய ஆரம்பித்திருப்பது கண்கூடு. இருபது வயது டெண்டுல்கர், உதவி கேப்டனாகியிருக்கிறார். மனோஜ் பிரபாகரும், ஸ்ரீநாத்தும் பெரிய படிமமாக உருவாகி வருகிறார்கள். விக்கெட் கீப்பர் கிரண்மோரேவுக்கு ஆல் மோஸ்ட் டாட்டா காட்டியாகி விட்டது. விஜய் யாதவ் நன்றாகவே டைவ் அடிக்கிறார். பேட்டிங்கும் கூடத் தேவலாம் போலிருக்கிறது.

இவர்களையெல்லாம் கட்டிக் காக்கும் அஸாருதீனுக்கும் கொஞ்சம் போல் வயதாகி விட்டதுதானெனினும் இளமை, அவர் வேகத்தில் இன்னும் தெரிவதால் பிழைத்தார்.

இவர்களெல்லாம் ஒருபுறம் இருக்கட்டும். ஒரு இளம்புயல் அத்தனை பேரையும் முந்திக் கொண்டு முன்னால் தெரியவில்லை, உங்களுக்கு?

வினோத் காம்ப்ளி!

டெண்டுல்கர் வந்த போது இருந்த பரபரப்பு காம்ப்ளி வருகையில் இல்லாதது துரதிர்ஷ்டம். ஆயினும் இப்போது காம்ப்ளி, இந்திய அணியின் தவிர்க்க முடியாத பிரஜையாகியிருக்கிறார். போகிற போக்கில் டெண்டுல்கரையே ஓரம் கட்டும் சாமர்த்தியம் காட்டிக் கொண்டிருக்கிறார்.

இருப்பினும் அந்த ஆரம்பச் சறுக்கலை அத்தனை சீக்கிரம் மறந்து விட முடியுமா என்ன?

1991.

ஷார்ஜா கோப்பை.

காம்ப்ளியின் ஆட்டம் அத்தனை மோசமில்லை. தட்டிக் கொடுத்தால் வளரக் கூடியவனாகத்தான் அறிமுகமானான்.

ஆனால் நமது பெருமைக்குரிய தேர்வுக் குழு என்ன சொன்னது?

''காம்ப்ளிக்கு இன்னும் பால பருவமே

நீரவில்லை. முகத்தில் பால் வடிவது இன்னும் நிற்கவில்லை. இந்தப் பையனால் இப்போது அதிகப் பிரயோஜனத்திற்கு சாத்தியமில்லை. எனவே இவன் ஆஸ்திரேலியா டூருக்குத் தேவையில்லை...

எனவே ஏமாற்றம். மனச் சோர்வு. ஏகமாய்த் தளர்வு. ஏற்கெனவே வெகு உணர்ச்சி வசப்படும் கேரக்டர். அது, கிரௌண்டிலேயே அவர் முகம் பார்த்தால் தெரியும். தனக்குத்தானே சலித்துக் கொள்வதும், அவ்வப்போது லேசாகக் கண்கலங்குவதும், எரிச்சலடைவதும், பொரிந்து தள்ளுவதுமாக உணர்ச்சிக் குவியல். ஆகவே இந்த ஏமாற்றத்தை அத்தனை சுலபமாகத் தாங்கிக் கொள்ள இயலவில்லை காம்ப்ளியால்.

காலம் அந்தப் புண்ணை ஆற்றியது. அடுத்த வாய்ப்பு கனிந்து வந்தது. ஆனால், அந்த உலகக் கோப்பைப் போட்டி அவருக்கு அவ்வளவாகக் கைகொடுக்காதது பிறிதொரு துரதிர்ஷ்டம். இந்திய அணி தென் ஆப்பிரிக்கா சென்ற போது காம்ப்ளி, வீட்டிலேயே இருக்க வேண்டியதாகி விட்டது!

தான் பார்வையைத் திருப்பின.

அன்று தொடங்கிய வேகம் -

அன்று தொடங்கிய ஆட்டம் -

அன்று தொடங்கிய ஒரு சகாப்தம் -

காம்ப்ளியை அணியில் நிரந்தரமாக்கியது.

அப்போதும் அவரைக் 'குழந்தைத் தனம்' மாறாதவர் என்றேதான் பலரும் வருணித்தார்கள்.

அந்தக் கூற்றைத் தனது இரண்டாவது டெஸ்டில் பொய்யாக்கிக் காட்டினார் காம்ப்ளி. ஸ்ரீலங்காவில் அந்த டெஸ்ட் அவருக்கு மட்டுமல்ல; இந்திய அணிக்கே ஒரு புதிய வெளிச்சம் காட்டியது! முதல் இன்னிங்ஸில் காம்ப்ளியின் அந்தச் சதம், அவரது முழுத் திறனுடன் முதிர்ச்சியையும் வெளிக் காட்டியது. சரியான பந்துக்காகவும் ஃபீல்டர் இல்லாத திசைக்காகவும் பொறுமையைக் காத்திருந்து, அனாயாசமாகப் பறந்த அந்த 'நான்கு'களும், 'ஆறு'களும் காலம் கடந்து நிற்கக்கூடியவை.

ஆனாலும் அவரது குறை - அவரது முன்கோபம். அதே மேட்சின் இரண்டாவது இன்னிங்ஸில் மோச மான அம்பயரிங் காரணமாக அவர் வாய்ப்பிழக்கும் தருணத்தில் - பொங்கின கோபம் இருக்கிறதே - போர்டு வரை புகார் போகும் அளவுக்குப் பெரிதானது வருந்துதற்குரியது தான்.

## வினோத் காம்ப்ளி :

# பால் வடியும் புயல்!

இத்தனைக்குப் பிறகும் அவரால் வீறுகொண்டெழ முடிந்திருக்கிறதென்றால் -

அது உழைப்பினால் வந்தது.

உறுதியினால் வந்தது.

அவரது Perfection ஆல் வந்தது.

ஜனவரி '92.

ஜெய்ப்பூரில் மேட்ச்.

காம்ப்ளி மறுபடி அணியில் இடம் பெற்றிருக்கிறார். இது அவருக்குக் கிடைத்த மறு ஜனனம். தன்னை நிரூபித்தே ஆக வேண்டிய கட்டாயம்.

அன்று அவருக்கு 21வது பிறந்த நாள் வேறு.

உற்சாகம், வெறி, உத்வேகம், முயற்சி, கவனம், உழைப்பு - சகலமும் சேர்ந்து காம்ப்ளியின் முதல் செஞ்சுரியைப் பிறப்பித்தது!

குரு, சுக்கிரன், சூரியன், சந்திரன் இன்ன பிறவுமாக சகல கிரகங்களும் அவர்பால்

அஸாருதீன் கூட ஒருமுறை காம்ப்ளியிடம் சொன்னார் : "உன் ஆட்டத்தை உன் கோபம் அழித்து விடாமல் பார்த்துக் கொண்டால் எதிர்காலம் மிகப் பிரகாசமாக இருக்கும்!"

உண்மைதான். காம்ப்ளி இப்போது ரொம்பவும்தான் மாறி விட்டிருக்கிறார். 'மெச்சூரிட்டி' வந்த மாதிரிதான் இருக்கிறது.

ஆயினும் -

படத்தைப் பாருங்கள்.

'பால் வடிதல்' நின்ற மாதிரியா தெரிகிறது?

– பியார்

நன்றி : வீக்லி

அட்டை வண்ணப்படம் : சாரி

# அஸ்வினி மஸில் ஆயில்

## மூட்டு வலி, சுளுக்கு மற்றும் இதர வலிகளிலிருந்து உடனடி நிவாரணம் அளிக்கிறது.






## உபயோகிப்பவர்களின் அபிப்பிராயம் :

அஸ்வினி ஹோமியோ பார்மஸி அவர்களுக்கு வணக்கம். நான் ஓர் ஓய்வு பெற்ற போஸ்ட்மாஸ்டர். சென்ற ஆண்டு நான் மூட்டுவலியால் மிகவும் கஷ்டப்பட்டேன். தரையில் உட்காருவதும், மலங்கழிக்க உட்காருவதும் கஷ்டமாக இருந்தது பல ஆயின்ட்மென்டுகளைத் தேய்த்தும் வலிகுறையவில்லை. எனவே, ஐதராபாத் உஸ்மானியா மருத்துவமனையில் காட்டினேன். அவர்கள் முதலில் எக்ஸ்ரே எடுத்துப்பார்த்து குறைபேதும் இல்லை எனத் தெரிவித்தார்கள். பிறகு பைரோக்ஸிகான் (Piroxycam) மாத்திரைகளை சாப்பிடச்சொன்னார்கள். பல கம்பெனிகள் தயாரித்த அந்த மாத்திரைகளை சாப்பிட்டுப் பார்த்த பிறகும் வலி தணியவில்லை. பிறகு உங்கள் விளம்பரத்தைப் பார்த்ததும், அஸ்வினி மஸில் ஆயிலைத் தேய்த்து மசாஜ் செய்தேன். சில நாட்களிலேயே 90% வலி குறைந்துவிட்டது. மிக்க நன்றி.

எம். அபிமன்யா (ஓய்வு பெற்ற போஸ்ட் மாஸ்டர்),
பாலாநகர், 509 202, மஹபூப்நகர், ஆ.பி.

விலை:
25 ml. பாட்டில் ரூ.10/-
வரிகள் உட்பட.

தயாரிப்பாளர்கள்:

**அஸ்வினி ஹோமியோ பார்மஸி**
மூஸாபேட், ஹைதராபாத் 500 018

உள்ளூரில் கிடைக்காவிட்டால், பேக்கிங் மற்றும் தபால் செலவுகள் உட்பட ரூ.50/-க்கு D/D மூலம் நேரடியாக அனுப்பி வைத்தால் மூன்று 25ml. மஸில் ஆயில் பாட்டில்கள் அனுப்பி வைக்கப்படும்.

*அஸ்வினி ஹோமியோ ஹேர் ஆயில் தயாரிப்பாளர்களின் மற்றுமோர் தயாரிப்பு*

**இல்லந்தோறும் இருக்கவேண்டிய வலி நிவாரணி**

# பரிமாணங்கள்

நளினி சாஸ்திரி

உத்தம் சென்குப்தா அந்த சம்பாஷணையைக் கேட்டு ஆடிப் போய் விட்டான். ஒட்டுக் கேட்கவில்லை. ஆனால் தானாகக் கேட்க வேண்டி நேர்ந்து விட்டது.

நேற்றிரவு பக்கத்து டெண்ட் டாக்கீஸில், ஷோலே நைட்ஷோ பார்த்ததால் சற்று அதிகம் தூங்கி விட்டான். வழக்கமாகக் காலை ஒன்பதுக்கெல்லாம் டிபனுக்கு 'மாமி மெஸ்' சென்று விடுவான். ஜெனரல் ஷிப்ட் - 10 மணிக்கு. தூக்கத்தால், குளிக்கக்கூட நேரமில்லாமல் அடித்துப் பிடித்து ஒன்பதே முக்காலுக்கு மெஸ்ஸை அடைகையில் மெஸ்ஸில் சாப்பிடுபவர் யாருமில்லை. முன்னறை காலியாக இருந்தது. முற்றம் சென்று கை கழுவிய உத்தம் சென்குப்தா காதில் மெஸ் மாமா, மாமி பேச்சு விழுந்தது.

"ருக்கு, இதில யோசிக்க என்ன இருக்கு? பேசாம மெஸ்ஸுக்கு நாலு நாள் லீவ் விட்றலாம். ஊர் போய் வருஷக்கணக்காச்சு. தீபாவளிக்குப் போன மாதிரியும் இருக்கும். அடுத்த நாள் நம்ம கல்யாண நாள். பத்து வருஷம் வெண்ணெயா ஓடிப் போச்சு. அதுக்குப் போன மாதிரியும் இருக்கும். சரியா?"

"வேண்டாம்னா. கல்யாணமாயி பத்து வருஷமாயும் உங்களுக்கு அது தெவலிருக்கா?"

"எங்கே, தீபாவளிக்கு அடுத்த நாள் கல்யாணமானதால மறக்கல. குப்பண்ணாவுக்கும் ஒடம்பு சரியில்லைன்னு லெட்டர் வந்ததால போலாம்னு தோணறது."

"தோ பாருங்கோ! இந்த உறவுங்கறதெல்லாம் பணம் பண்ற பிணைப்புன்னு இன்னுமா புரியலை? நாம வேலையில்லாம தவிச்சப்போ மூணு நாள் கூடத் தங்க விடாம துரத்தின உறவுக்காரா எல்லாம் இப்ப உங்களுக்கு வேண்டிப் போச்சா? எனக்கு எதும் மறக்கலை. நமக்குக் கை கொடுத்தது இந்த ஊர்தான். ஆறு வருஷமா இந்த மெஸ் நடத்தறோம். இருபது பேருக்கு சாப்பாடு போடறோம். உண்மைல நமக்கு சாப்பாடு போடறது அவாதான். வேற வேற ஸ்டேட்லேருந்து குடும்பத்தை விட்டு, ஒண்டிக் கட்டையா நம்பள நம்பி இருக்கறவாள நாலு நாள் பசிக்க விட்டு நம்ப சவுகரியத்துக்கு ஜாலியா போறது சரியான்னா?"

"நாலு நாள்தானே ருக்கு?"

"நாலு நாள் எல்லாரும் அந்த கைக்கடை பரோட்டா தின்னு வயித்த கெடுத்துக்க நாம காரணமாயிருக்கணுமா? சொந்தமோ, பந்தமோ, உறவாப் பழகிட்டோம். குழந்தைகளை தவிக்க விட்டு வரது எனக்குப் பிடிக்கலை. வேணாம். எந்த ஊரும் வேணாம். மனசே கடவுள். நம்பி வாழ வைக்கற குழந்தேள வயிறு காயாம பாக்கறது ஒரு கடமையில்லையா? பாம்பேல கலவரம் பத்தி எரியற இந்த சமயத்துல வடநாட்டுக்காராளான இவாளுக்கு யாரும் உதவலைன்னா என்ன பண்ணுவா?"

போட்டிக் கதை - 15

உத்தம்சென் குப்தாவுக்கு வரிக்கு வரி புரியாவிட்டாலும் அவர்கள் பேசியதன் பொருள் தெரிந்து விட்டது. கை கழுவி முன்னறையிலிருந்த மூன்று சின்ன மேஜையில் வழக்கம் போல மூன்றாவதில் சுவரோரம் அமர்ந்தான்.

''வாங்க சார், என்ன மணி பத்தாகப் போறதே! லீவ்னு நெனச்சேன். லேட் பஞ்சா?'' என்றவாறு வாழையிலை கொணர்ந்து போட்டார் நாராயணன்.

தும்பைப் பூ போல வேட்டி. அதே போல ஷர்ட். நெற்றியில் விபூதிப் பட்டை. நடுவில் சந்தனப் பொட்டின் நடுவில் குங்குமம். மெஸ் மாமாவைப் பார்த்தாலே, தெய்வீகக்களை சொட்டும். நாளின் எந்த நேரத்தில் பார்த்தாலும் அப்படியே இருப்பார். அவரால் எப்படி அது சாத்தியமாகிறது என்பதில் எல்லாருக்கும் ஒரு பிரமிப்பான ஆச்சரியம் உண்டு. 'நாராயணா மெஸ்' என்று பெயர்ப் பலகை இருந்தாலும் மெஸ்ஸுக்கு அடையாளப் பெயர் என்னவோ மாமி மெஸ். அப்படியே நிலைத்து விட்டது.

''சார் உடம்பு தேவலையா? ரெண்டு நாளா காச்சல் இருந்ததா உங்க ரூம் மேட் மணி சொன்னார்.''

''பரவால்ல சார்.''

உத்தம்சென் குப்தா மற்றவர்களைப் போல் அரட்டை அடிப்பவன் அல்ல. மொழி தெரியாத காரணமல்ல. இங்கு வந்து நாலு வருடத்தில் தமிழ் நன்றாக வந்து விட்டது. இலக்கண சுத்தமான தமிழ். ஆனால் அதிகம் பேசாததற்கு சங்கோஜம் தான் காரணம்.

இந்தத் தொழிற்சாலையில் என்ஜினியராகச் சேரும் முன் இரண்டு ஊர்களில் குப்பை கொட்டின அனுபவம் உண்டு. அங்கும் மெஸ்தான். ஆனால் மாமி மெஸ்ஸுடன் எதையும் கம்பேர் பண்ண முடியாது.

நாராயணன் ஆவி பறக்க இட்டிலிகளை வைத்தார். சாம்பார். மிளகாய்ப் பொடி.

''சார் சட்டினி தீந்தாச்சு. ஒரு அஞ்சு நிமிஷம் வெயிட் பண்ணா ஆயிடும். ஆமா, லாக்-அவுட் வரும்னு சொல்லிக்கறாளே. நீங்கதான் ஆபீஸ்லே இருக்கேளே, தெரியுமா சார்?''

''நோ ப்ராப்ளம். லாக் அவுட் எல்லாம் வராது. ரூமர். எனக்காக சட்டினி ரெடி பண்ண வேண்டாம். இதுவே போதும்.''

''அதுக்கில்ல சார். மாசமானா பைசா கொறயாம காசு தரேள். உங்க நாக்குக்கு நாங்க கொற வெக்கலாமா?''

அதற்குள் கதவில் எட்டிப் பார்த்த மாமி, மாமாவைக் கூப்பிட்டாள். மாமி கையில் அதற்குள் சட்னி தயாராகயிருந்தது.

இதனாலேயே மாமி மெஸ் அவனுக்கு மட்டும் இல்லாமல் எல்லாருக்கும் பிடித்துப் போய் விட்டது. மாமி மெஸ்ஸின் தாரக மந்திரம் சுத்தமும் அதன் தரமும். காசுக்காக அவை என்றும் விலை போனதில்லை.

வீடுதான் மெஸ். இடம் பற்றாத குறை. முன் ஹாலில் மூன்று டேபிளில் ஒரே சமயம் ஆறு பேர் சாப்பிடலாம். மற்றவர்கள் திண்ணையில் உட்கார்ந்து காத்திருக்க வேண்டியதுதான். சாப்பிடுபவர்களே இலையை எடுத்துப் போட்டு விடணும். சின்ன சமையலறையில் விறகு அடுப்புதான். ருக்மணி மாமி கண் சிவந்து அடுப்பூதினாலும் வேலையில் யந்திரம். கைவேகம் அசுர கதியில் ஆறு பேரையும் சமாளிக்கும். தோசை வேகும் நேரத்தில் சட்னி கல் ஓரலில் தயாராகும். இடமும் நேரமும் பற்றாத காரணத்தால் மெஸ் மெம்பர்கள் இருபதுக்கு மேல் சேர்ப்பதில்லை.

மாமி மெஸ்ஸின் மற்றொரு சிறப்பு அங்கே கிடைக்கும் பலன் எதிர்பாராத அன்பு.

''என்ன ராமன் சார்! வாரா வாரம் ஆளக் காணோம்? ஊரா? போனவாட்டி உங்கப்பா வந்தப்ப ஜாதகம் கேட்டார். குதிர்ந்ததா?''



என்று நாராயணன் பேச்சு, குடும்பத்தில் இணையும்.

''மேனேஜர் சார், உங்களுக்கு சுகர் கம்ப்ளயின்ட் மறந்து போச்சா? ஸ்வீட் இடையவே இடையாது'' என்று பேச்சில் உரிமை இழையும்.

''ராஜா சார், உங்களுக்கு காச்சல். மாமி பத்திய சாப்பாடுதான்னு சொல்லிட்டா. ஸ்பெஷலா மிளகு ரசம் இந்தாங்கோ'' என்று பிரத்யேக உபசரிப்பில் உறவு இறுகும்.

மாமி சமையல் கட்டோடு சரி. பரிமாறல் எல்லாம் மாமாதான். ஆனால் வழக்கமாகச் சாப்பிடும் இருபது பேரின் சுகதுக்கங்கள் குடும்ப நிலவரம் எல்லாம் மாமிக்கு அத்துப்படி.

ஏன்னா, நம்ப ரகுசாரோட தங்கைக்கு ஒரு வருஷம் முன் கல்யாணமாச்சே? பூச்சி பொட்டு உண்டா கேளுங்கோ! - உத்தரவு சமையலறைக்குள்ளிருந்து வரும். மாமா, மாமிக்கு குழந்தைகளில்லாவிட்டாலும் மெஸ்ஸால் கிடைத்த குடும்பம் பெரிது. கல்யாணமாகிப் போனவர்கள் போக, அவ்வப்போது புதிதாக வந்து சேரும் பிரம்மச்சாரிகள் எப்படியும் சுமார் இருபதுக்குக் குறையாமல் இருக்கும்.

உத்தம்செங்குப்தா சாப்பிட்டு ஆபீஸ் போயும் கூட காலை சம்பாஷணை மனதில் குடைந்தது. மாமியின் பாசம் பிரமிக்க வைத்தது. புகை நடுவில் அடுப்பூதும் மனசுக்குள் இப்படி ஒரு பாசமா?

தீபாவளிக்கு வாடிக்கையாளர்கள் இருபது பேரில் பத்து பேர் ஊருக்குப் போனார்கள். 10 பேர் தொழிற்சாலை தொடர்ந்து இயங்க வேண்டிய காரணத்தால் போகவில்லை. ஊருக்குப் போன 10 பேருக்கும் தீபாவளி ஸ்பெஷலாக நிறைய ஸ்வீட் செய்து தரப்பட்டது. மாமியின் கை வண்ணம் அவர்கள் ஊருக்கும் பரவி நின்றது. நிறைய ஸ்வீட் விறகு அடுப்பில் செய்ய நேர்ந்ததால் மாமி சற்றுத் தளர்ந்து போனாள். தீபாவளி கங்கா ஸ்நானம் கூட மாமாவால் மறுக்கப்பட்டது.

''ருக்கு, இந்த உடம்போட எப்படி சமைப்பே? பேசாம மெஸ்ஸுக்கு லீவு விட்டுடலாம்.''

''பேத்தாதீங்கோ, இந்த அலுப்பு நாளைக்கே ஓடிடும். சமாளிச்சுடலாம்.''

ஆனால் தீபாவளிக்கு அடுத்த நாள் அவர்களுக்கு ஆச்சரியம் காத்திருந்தது. உத்தம்செங்குப்தா தலைமையில், அவனும் மேட்ஸ் ஐந்து பேரும் பெரிய பார்ஸலுடன் வந்தார்கள்.

''மாமா, மாமியை வெளில கூப்டுங்கோ'' என்று சொல்ல, மாமி எட்டிப் பார்த்தாள்.

''மாமா - மாமி! உங்களுக்கு எங்கள் வாழ்த்துக்கள். இந்த பத்தாவது கல்யாண



இந்திய உயிர்க் காட்சி சாலைகளில் உள்ளவைகளிலேயே மிக வயதான பிராணி கல்கத்தாவின் அலிப்பூர் காட்சி சாலையில் உள்ள ஒரு ராக்ஷச ஆமை தான். 1875 ம் ஆண்டு சீஷெல்ஸ் தீவி லிருந்து கொண்டு வரப்பட்ட ஐந்து அடி நீளமுள்ள இதன் இன்றைய வயது 200 ஆண்டுகளுக்கும் அதிகம் என்று நிபுணர்கள் கணிக்கிறார்கள்.

- அ. ஷண்முகசுந்தரம்.

---

நாள் என்றும் நினைவில் இருக்கட்டும்'' என்று சொல்லி விட்டுப் பார்ஸலைத் தந்தார்கள்.

பிரித்த மாமா, மாமி அதிர்ந்தனர். உள்ளே புதிய கேஸ் அடுப்பும், கனெக்ஷனுக்கான ரசீதும்.

''என்னப்பா இதெல்லாம்? வீண் செலவு.''

''இல்ல மாமா. நாங்க யாரோ, நீங்க யாரோ. அதெல்லாம் பாக்காம வயித்துக்கு வஞ்சனை பண்ணாம சோறு போடற உங்களுக்கு, நாங்க எந்த நன்றியும் பண்ண முடியாது'' என்றான் ஜான்.

''ஒரு நாளாவது கணக்கு பாத்திருக்கீங்களா? சொந்த வீட்ல கூட இப்படிக் கணக்குப் பாக்காம இருக்கற கூட்டுக் குடும்பம் கெடையாது'' என்றான் உத்தம்சென் குப்தா.

நாராயணனும், ருக்மணியும் அன்பில் அப்படியே நெகிழ்ந்து விட்டார்கள். கண்களில் நீர் வழிந்தது.

''பத்து வருஷமா குழந்தையில்லாத குறை இப்ப தீர்ந்த மாதிரி இருக்கு. தோ, எங்களுக்கு எத்தனை குழந்தைகள்!'' மேலே பேச முடியாத நாராயணன் விம்மி விம்மி அழ ஆரம்பித்து விட்டார்.

நாலைந்து மாதமாக நீருபூத்த நெருப்பாக உலாவந்த வதந்தி வெடித்தது. கம்பெனி காலவரையற்ற லாக்-அவுட். திரும்ப திறப்பதற்கான அறிகுறிகள் இல்லை. காலைப் பேப்பரில் இடியாக செய்தி மக்களைத் தாக்கியது. மிகவும் இடிந்து போனது மாமி மெஸ்தான். ஹோட்டல் மாதிரியும் இல்லாமல் ஆட்களை அதிகப் படுத்தாமலும் குறிப்பிட்ட சுமார் 20 பேருக்கு மட்டும் நடத்து வந்ததால் ஒரே நாளில் மூச்சுத் திணறியது. இடப் பற்றாக் குறையால் வாடிக்கையாளர்களை அதிகப் படுத்தாமல் விட்டது எவ்வளவு தவறு என்று வருந்தினார்கள். நாராயணனும் ருக்மணியும் பேசாமல் சொந்த ஊர் போய் விட முடிவு செய்தார்கள். குப்பண்ணா வீட்டில் எடுபிடி வேலை செய்தாவது வயிறு நிறையும். உடைந்த மனதுடன் ''நாராயணா மெஸ்'' என்ற போர்டைக் கழற்றி உள்ளே வைத்தார்.

அன்று தேதி 5. சம்பள தினம். ஒரு காலத்தில் சம்பள தினம். ஆமாம், அதற்குள் 25 நாட்கள் என்பது 'ஒரு காலம்' என்பதாக மாறியிருந்தது. மெஸ்ஸுக்கும் அன்றுதான் சம்பள தினம். ஒவ்வொருவராக நாராயண விடம் பணம் தருவார்கள். இனி எல்லாம் கனவுதான். மளிகை மீதம் வைத்து ஒரு மாதம் இருவருக்கும் ஓட்டலாம். அதற்குள் லாக் அவுட் வாபஸ் ஆனால்தான் உண்டு.

ஒருவர் முகத்தை ஒருவர் பார்த்தவாறு நாராயணன் - ருக்மணி அமர்ந்திருந்த அந்த சோக தருணத்தில், வாசலில் பெல் சப்தம் கேட்டது. போஸ்ட் மேன்.

'குப்பண்ணா கூட லெட்டர் போட மாட்டேனென்று வைதானே! யார் லெட்டர்?' நாராயணன் பரபரப்பில் வாசல் நெருங்க,

''சாமிக்கு மத்தியப் பிரதேசத்திலிருந்து எம்.ஓ. வந்திருக்கு. நூறு ரூபா. இதுல கையெழுத்து போடு சாமி.''

'மாமா - மாமிக்கு,

பெற்றோர்களாக கவனித்து வளர்த்த உங்களுக்கு இந்த மகனின் சிறு உதவி. மறுக்கக் கூடாது. லாக் அவுட் முடியும் வரை ஏற்றுக் கொள்ளவும். நமஸ்காரம் - உத்தம்' என்று அடி ரசீதில் எழுதியிருந்தது.

அடுத்த நாள் ஏறத்தாழ இதே வரிகளுடன் ஜான் 50 ரூபாய் அனுப்பியிருந்தான்.

அடுத்த நாள் ஏறத்தாழ இதே வரிகளுடன் ரகுவின் 100 ரூபாய் வந்து சேர்ந்தது.

அதே நாளில் ஏறத்தாழ இதே வரிகளுடன் சுரேஷ் கூட 25 ரூபாய் அனுப்பியிருந்தான்.

''உடலளவில் மட்டுமல்லாமல் கடமையிலும் கூடப் பிள்ளைகளாக திருபிச்ச அவங்களுக்கு நாம எப்படித்தான் கைம்மாறு செய்யப் போறோமோ?'' என்று தழுதழுத்தாள் ருக்மணி.

புது நம்பிக்கையுடன், நல்லது நடக்கும் என்ற உற்சாகத்துடன் மீண்டும் ''நாராயணா மெஸ்'' என்ற போர்டை எடுத்து வாசலில் ஆணி அடித்து மாட்டலானார் நாராயணன்.

# நீதிக்குப் பின் பாசம்?



## பேநஸிர் - மூர்தாஸா :

இத்தனை வருடங்கள், பாகிஸ்தானுக்கு வெளியே தலைமறைவாக இருந்து வந்த மூர்தாஸா அலி புட்டோ, அக்கா பேநசீர் ஜெயித்து ஆட்சியைப் பிடித்து, பிரதமர் ஆனதும் கராச்சியில் கால் வைத்தார்.

கராச்சி ஏர்போர்ட்டில் இறங்கினாரோ இல்லையோ, உடனே கைது செய்யப்பட்டு, சிறையில் தள்ளப்பட்டார் மூர்தாஸா.

முதலில் நீதி; அப்புறம்தான் தம்பி - என்று பேநசீர் பாரபட்சமின்றி நடந்து கொண்டிருப்பதாக, வெளிப் பார்வைக்கு மேலோட்டமாகத் தோன்றினாலும், அது உண்மை அல்ல!

ஜியா உல் ஹக் ஆட்சியின் போது, பயங்கரவாதச் செயல்களில் ஈடுபட்டார் மூர்தாஸா. அதற்கு அவர் சொன்ன காரணம், ஜியாவின் சட்ட விரோத, எதேச்சாதிகாரமான ஆட்சி முறை. ஆனால் பாகிஸ்தான் உச்சநீதி மன்றம், ஆர்.எம்.வீ. பானியில், ஜியா ஆட்சிக்கு வந்தது அப்போதைய காலத்தின் கட்டாயம் என்று தீர்ப்பளித்து விட்டது! ஜியாவின் ஆட்சியும் நியாயப் படுத்தப்பட்டு விட்டது. உச்சநீதி மன்றம், முன்னர் சொன்ன தீர்ப்பை இப்போது மாற்றிக் கொண்டால், ஜியா மீது வசைமாரி பொழிந்து, மூர்தாஸாவை ஹீரோவாக்கி விடுவார்கள், அவரது ஆதரவாளர்கள்.

ஆனால் அது மட்டுமே இப்போது பிரச்னை அல்ல.

பாகிஸ்தான் மக்கள் கட்சியின் இரண்டு தலைவர்களில் ஒருவர், பேகம் நஸ்ரத் புட்டோ. இன்னொருவர்தான் பிரதமர் பேநசீர்.

பேநசீரின் கணவர் ஜர்தாரியின் ஊழலும், தலையீடும் அம்மா நஸ்ரத் புட்டோவுக்கு அடியோடு பிடிக்கவில்லை என்பது ஒரு புறம். பேநசீரின் எதேச்சாதிகாரமான போக்கு அவரது கட்சியைச் சேர்ந்தவர்களுக்கே ஆத்திர மூட்டியிருக்கிறது இன்னொரு புறம். இவர்களுக்கு எல்லாம், புட்டோ குடும்பத்தைச் சேர்ந்த மூர்தாஸாவை ஒரு தலைவராகத் தூக்கி வைத்துக் கொண்டாட ஒரு வாய்ப்புக் கிடைத்திருக்கிறது.

ஆனால் உண்மையில் இது சாத்தியமா? அந்த அளவுக்கு விட்டுக் கொடுத்து விடுவாரா பேநசீர்?

ஊகும். அதுதான் நடவாது!

பேநசீருக்கு, அவரது ஆதரவாளரான பரூக் லெகாரி அதிபராகத் தேர்ந்தெடுக்கப்பட்டு விட்டது சாதகமாகப் போய் விட்டது மட்டுமின்றி, ராணுவமும் பேநசீருக்குப் பூரண ஒத்துழைப்பு தருவதாகவும், அநாவசியக் குறுக்கீடுகள் எதுவும் செய்யாது என்றும் வாக்குறுதி அளித்திருக்கிறது.

தன்னை எதிர்த்து, தன் தம்பியே தேர்தலில் போட்டியிட முற்பட்டது பேநசீருக்குக் கொஞ்சமும் பிடிக்க



"நாடு ரொம்பத்தான் முன்னேறி டிச்சு போச்சு."

"எப்படிச் சொல்றீங்க?"

"அந்த ஆபீஸ்ல, 'இரு வார லஞ்ச விழா' கொண்டாடறாங்களே!"

– சீர்காழி வி. ரேவதி



"என்ன சார், பியூன் மணி அடிக்க, மேனேஜரான நீங்க ஓடறீங்க?"

"என்ன செய்யறது? மந்திரி சிபாரிசாச்சே?"

– ஆர். வசந்தகுமார்



"ஒவ்வொரு தடவையும் பொதுக் கூட்டத்திலே தலைவருக்கு ரூபாய் நோட்டு மாலை அணிவிக்கிறீங்களே, எப்படி முடியுது?"

"ஹி...ஹி ஏதோ, சொந்தமாகப் பிரஸ் இருக்கிறதால் சமாளிக்கிறேன்!"

– வேதபுரி எஸ். ரமேஷ்

வில்லை. 'தன்னை எதிர்த்து' என்றால், தன் கட்சி வேட்பாளர்களை எதிர்த்து. அதிலும் 24 தொகுதிகளில் முர்தாஸாவே போட்டி யிடுவது பேநசீருக்கு வெறுப்பை உண்டாக்கியது. "ஒரு மகிழ்ச்சிகரமான நேரத்தில், முர்தாஸாவின் முடிவு வருத்தத்தைத்தான் அளிக்கிறது. அவர் ஒரு இடத்தில் போட்டியிட்டிருந்தால் பரவாயில்லை. ஆனால் ஒருவரே 24 தொகுதிகளில் போட்டியிட முயன்றால் என்ன அர்த்தம்?" என்று ஒரு பேட்டியில் குமுறினார் பேநசீர்.

அவரிடம் பேசவும் விரும்பவில்லை பேநசீர். பேசிப் பயனில்லை என்பது அவர் கருத்து. "ஆனால் தம்பி என்ற முறையில் அவர்பால் எனக்குச் சகோதர நேசம் உண்டு" என்றார். கவனிக்கவும் - நேசம்தான், பாசம் அல்ல.

முர்தாஸாவுக்கு, அம்மா நஸ்ரத் புட்டோ முழு ஆதரவு கொடுக்கிறார். ஆக, இது வாரிசு அரசியலில் ஒரு முக்கியமான கட்டம்.

முர்தாஸாவின் விசாரணை இழுத்தடித்துக் கொண்டு போவது நல்லதுக்கில்லை என்றே பலரும் கருதுகிறார்கள். அது பாகிஸ்தானிய அரசியல்வாதிகள் பலருக்குத் தர்மசங்கடத்தை உண்டாக்கி விடும். காரணம், இவர்கள் எல்லாமே, முர்தாஸா வெளிநாட்டில் இருந்த போது, அவருடன் ரகசியமாகத் தொடர்பு வைத்திருந்தவர்கள்!

குமாரி தெஹ்மினா துரானி ஒரு புத்தகம் எழுதியிருக்கிறார். 'மை ஃப்யூடல் லார்ட்' என்று பெயர். அதில் இந்த விவரங்களை எல்லாம் விலாவாரியாகக் குறிப்பிட்டிருக்கிறார் தெஹ்மினா.

பேநசீர் புட்டோவைப் பிடிக்காதவர்களுக்கு, ஆனால் புட்டோ குடும்ப ஆதரவாளர்களுக்கு, இன்னொரு புட்டோ கிடைத்திருப்பது ஆறுதலும், மகிழ்ச்சியும் அளிக்கலாம்.

'ஆனால் தங்கள் இருவரின் எதிர்காலத்தைக் குறித்து இருவருக்குமே அக்கறை இருக்குமானால், பேநசீரும் முர்தாஸாவும் ஒரு சுமுகமான தீர்வு காண்பது நல்லது' என்கிறார் ஒரு மூத்த பத்திரிகையாளர்.

இருக்கட்டும்.

பாகிஸ்தான் மக்கள் கட்சியிலேயே இருந்து கொண்டு, வேறொரு சின்னத்தில், அம்மா நஸ்ரத் புட்டோவின் ஆசியோடும், ஆதரவோடும் போட்டியிட்ட, முர்தாஸா எத்தனை இடங்களில் வென்றார்?

அதுதான் சுத்தமாகத் தெரியவே இல்லை!

– எஸ்.வி.என்.



# எங்க முதலாளி

**வி**ஜய்காந்த் ஊருக்கு உபகாரி. நல்லவன். உருப்படாத தம்பி. கதை புரிந்திருக்குமே. பாகப்பிரிவினை. உணர்ச்சிப் போராட்டம். உருளல், புரளல், கும்மாளம். ஆங்காங்கே அடிதடி. கிளைமாக்ஸில் 'என்னை மன்னிச்சிடுங்க'.

அறுபதின் கதை. எவர்கிரீன் சப்ஜெக்ட். பிரம்மாண்டமாய் வீடு. எங்கே பிடித்தார்களோ? அண்ணியாகக் கஸ்தூரி. மரத்துக்கு மரம் ஓடி டூயட் பாடும் பெண்ணை அண்ணியென்றால்? ஒட்டவில்லை.

ஆர். சுந்தர்ராஜன் சகுனி. உடம்பெல்லாம் விஷம். பொருத்தம். தத்தக்கா பித்தக்கா காமெடிக்கு இனி டாட்டா.

வித்தியாச அடிதடி. ரசிக்கும் காமெடி. பாடல்கள் கொஞ்சம் கடி. 'குங்குமம் மஞ்சளுக்கு' டியூனும், காமிராவும் ஓ.கே. திருஷ்டி சுற்ற வேண்டும் ராதா ரவிக்கு. சொதப்பல் டைலாக்கிலேயே மனுஷன் 'ஷோ' காட்டுகிறார்.

எக்கச்சக்க ஜால்ரா. பிடித்து வைத்த பிள்ளையார் கணக்கில் ஒரு அம்மா. ஒரு இடத்தில் வீறிடுகிறார். சிரிப்பே மிச்சம். கொலை பண்ணவே நெப்போலியன். சினிமாஸ்கோப் ஸ்கிரீனை நிரப்ப, அப்பப்போ சுமித்ரா, எஸ்.என். பார்வதி.

விஜயகாந்துக்கு இது ஏணி. நாலு படி சறுக்கினாலும் இரண்டு படி உயர்வுதான். மடித்துக் கட்டிய வேட்டி. தூசு படாத சட்டை. சின்னக் கவுண்டர் ஞாபகம். மற்ற படி ஓ.கே.

வசனகர்த்தா பஞ்சு கவனிக்க. ரெட்டிகளுக்கு ஒரு கலாசாரம் உண்டு. வீட்டில் தெலுங்கு பேசுவார்கள் என்று ஞாபகம். சாஸ்திரத்திற்குக் கொஞ்சம் தொட்டுக் காட்டியிருக்கலாம்.

– துளசி

# பாண்டியன் மகள்

**விஷ்வக்சேனன்**

## 47. பட்டணப் பிரவேசம்

ஸ்ரீ வல்லபர் முற்பிறப்பில் மயனாக இருந்திருக்க வேண்டும். ஏதோ மந்திரத்தால் மதுரை மாநகரை மாற்றியதைப் போல அந்த அழகிய பெரு நகருக்கு புதுக் கோலத்தை அளித்திருந்தார். நான்கு பெரும் மாடவீதிகளும் தோரணங்களாலும் கொடிகளாலும் பார்வைக்கு அற்புதமான காட்சி அளித்துக் கொண்டிருந்தன. அரண்மனை மங்கையர் வாசல்களில் எழுதியிருந்த மஞ்சளும் செம்மண்ணும் கலந்த வண்ணக் கோலங்கள் மதுரையின் மங்கல சௌபாக்கியத்தைப் பறைசாற்றிக் கொண்டிருந்தன. அரண்மனையின் நூற்றுக் கணக்கான யானைகளுக்கு அணிவித்திருந்த பட்டுச் சீலைகளும் மத்தகத்தில் ஜொலித்த ஆபரணங்களும் பளபளத்தன. கழுத்தில் தொங்க விடப்பட்டிருந்த மணிகள், யானைகள் சதா அசைந்து கொண்டிருப்பதால் கணீர் கணீர் என்று ஒலியெழுப்பிக் கொண்டிருந்தன.

உதய நேரத்திற்குப் பின் இரண்டாவது நாழிகையில் மன்னர் வடக்கு வாயில் வழியாகப் பட்டணப் பிரவேசம் செய்வார் என்று பறையறிவித்திருந்ததால் வடக்கு வாயிலிலும் ராஜவீதிகளிலும் மக்கள் வெள்ளம் அலைமோத ஆரம்பித்திருந்தது.

சாளுக்கிய விக்கிரமாதித்தனை வென்ற அதே வேகத்தில் தெற்கே திரும்பி, சேரனையும், பாண்டியரின் கூட்டுப் படையையும் முறியடித்து விஜயாபிஷேகம் செய்து கொள்ள மதுரைக்கு வரும் சோழப் பேரரசன் குலோத்துங்கனைக் காண மக்கள் வெள்ளம் திரண்டு, அவனைப் பற்றிய வீரக் கதைகளை விதவிதமான கற்பனைகளுடன் கலந்து பேசிக் கொண்டிருந்தது.

உடன் சேர மன்னன் பாஸ்கரவர்மனும் வருவதாக அறிவிக்கப்பட்டிருந்ததால், அலங்காரங்களும் வரவேற்பு ஏற்பாடுகளும் இரட்டிப்பாகவே இருந்தன. தமிழகத்தின் இரு பெரும் மன்னர்கள் மூன்றாவது அரசின் தலைநகரில் கூடுவது குறித்து பட்டயங்களும் சாசனங்களும் கவிதைகளும் எழுதப்பட்டன. மெய்கீர்த்திகளில் பாண்டியரை வென்றதையும் சேரலாதனை சிற்றரச வாக்கியதையும் எழுதிய அரண்மனைக் கவிஞர்கள் பரிசுகளுக்காகக் காத்து நின்றனர்.

சோழ குலோத்துங்கன் மதுரையில் பட்டணப்பிரவேசம் செய்வதைக் காண விரும்பிய கதிரவனும் கீழ்த் திசையில் உதயமானான். துந்துபிகளும் தாரைகளும், வாத்தியங்களும் முழக்கமிட ஆலயங்களின் மணிகள் இடைவிடாது ஒலித்தன.

வெண்ணிறப் புரவிகள் பூட்டிய தனது போர் ரதத்தில், அருகில் சேரலாதன் பாஸ்கரவர்மன் அமர்ந்திருக்க, விக்கிரமனும் காலிங்க ராயனும் ஸ்ரீ வல்லபரும் மற்ற படைத் தலைவர்களும் பின் தொடர, பெரும் புலிக்கொடி பறக்க கோட்டையின் வடக்கு வாசல் வழியாக மதுரைக்குள் பிரவேசித்தான் குலோத்துங்க சோழன்.

வடக்கு ராஜவீதியில் தொடங்கிய ஊர்வலம் நான்கு மாடவீதிகளையும் வலம் வந்தபின் அரண்மனையை அடைய உச்சிப் பொழுதாயிற்று. வழியெங்கும் மங்கையர் மலர் தூவி வாழ்த்துப் பாக்கள் இசைக்க, அரண்மனையை அடைந்த மன்னன், ஆரத்தியை ஏற்று சேரலாதனுடன் உள்ளே நுழைந்தான்.

அரசவைப் பிரதானிகளையும் பிரமுகர்களையும் கூடத்தில் சந்தித்து அவர்களுடன் சற்று நேரம் உரையாடி விட்டுத் தன் அறையை நோக்கி நடந்தான்.

அறைக்குள் பெரிதாக வாக்குவாதம் நடந்து கொண்டிருந்தது. விக்கிரமன் இரு இளவரசிகளின் நடுவில் சிக்கி அவர்கள் சரமாரியாகத் தொடுத்த கேள்விகளில் திணறிக் கொண்டிருந்தான். கோட்டைக்குள் மன்னன் நுழைந்தபோதே உடன் வந்தவர்களை விழிகளால் துழாவி, அந்தக் கூட்டத்தில் அரையன் மதுராந்தகன் இல்லையென்பதை கவனித்திருந்த அம்மங்கை முகம் வாடியிருந்தாள். அதில் கோபமும் ஆத்திரமும் வெடித்துக் கொண்டிருந்தது. நடந்த போரைப் பற்றி விரிவாகக் கூறிய விக்கிரமன், அரையனைப் பற்றி ஒரு வார்த்தை கூடச் சொல்லாததையும், திரும்பத் திரும்ப மாறவர்மனைப் பற்றியும், தப்பி விட்ட

மார்த்தாண்டனைப் பற்றியுமே பேசியதையும் கண்ட அம்மங்கையின் பொறுமை எல்லை கடந்தது.

மன்னன் உள்ளே நுழைந்ததும் சட்டென்று அறையில் அமைதி நிலவியது. கார்குழலி தலை தாழ்ந்தது. மெல்ல மன்னனை நோக்கி நடந்த அவள் அவனை வணங்கி எழுந்தாள். விக்கிரமனின் வீரம் சொட்டும் விழிகளில் சற்று வெட்கம் கூட எட்டிப் பார்த்தது. இருவரையும் வாழ்த்திய மன்னன் அறையில் ஒருபுறமாக நின்றிருந்த அம்மங்கையின் முகம் வாடியிருப்பதைக் கவனித்தான். மதுரையில் அவர்களை விட்டுச் சென்றபின் சந்திப்பது இதுதான் முதல் முறை என்றாலும் அவள் தன்னிடம் நெருங்கவோ, உரையாடவோ செய்யாமல் அலை பறந்த விழிகளுடன் தனித்து நிற்பதைக் கண்டவன் முகத்தில், விஷமச் சிரிப்பொன்று பரவியது.

''அம்மங்கை மிகுந்த கோபத்திலிருப்பதாகத் தெரிகிறது'' என்றான் மன்னன். மன்னன் கேள்வியைத் தொடர்ந்து மூவரின் பார்வையும் தன் மீது பதியவே அவள் தலை மெல்லத் தாழ்ந்தது.

''எனக்கு எந்தக் கோபமுமில்லை'' என்று முணுமுணுத்த அவள் உதடுகள் மடிந்து, பொங்கி வந்த துக்கத்தை அடக்கின. அவள் விழிகளில் திரண்ட நீர் முத்துக்கள் உருண்டு தரையில் விழுந்ததைக் கண்ட மன்னன், இரண்டே எட்டில் அவளை அடைந்து அணைத்துக் கொண்டான்.

அதுவரை அடக்கி வைத்திருந்த ஆத்திரம், கோபம், துக்கம் அனைத்தும் கரையை உடைத்து வெள்ளமாகப் பாய முற்படவே, மன்னனின் அகன்ற மார்பில் முகத்தைப் புதைத்துக் கொண்ட அம்மங்கை கேவினாள்.

''மகளே! உன் இதயம் எனக்குத் தெரியும். ஆனால் மதுராந்தகன் மேற்கொண்ட பணி இன்னும் நிறைவு பெறவில்லை. அது நிறைவு பெறுமுன் அவன் வரவும் மாட்டான். இன்னும் ஒருநாள் பொறுத்திரு.





"பஸ் ஸ்டிரைக்கை உடனடியாக வாபஸ் வாங்கணும்னு யார் அங்கே உண்ணாவிரதம் இருக்காங்க?"

"ஜேப்படி செய்பவர் சங்கமாம்!"

- சரவணன்

உனக்கும் செய்ய வேண்டிய பணிகள் நிறைய இருக்கின்றன" என்றான் மன்னன்.

அம்மங்கையின் வாடிய முகம் மன்னனை ஏறெடுத்து நோக்கியது. "எனக்கு என்ன பணி அப்பா?" என்று கேட்கவும் செய்தாள்.

"மகிழ்ச்சி தரும் பணிதான் அம்மா! விஜயாபிஷேகம் முடிந்ததும் உன் தமைய னுக்குத் திருமணம் செய்வதானால் உனக்குப் பணியில்லாமலா போய் விடும்?"

குலோத்துங்கனது வார்த்தைகள் அந்த அறையின் சூழலை உடனடியாக மாற்றி யது.

அம்மங்கையின் முகத்திலிருந்த கோப மும் சோகமும் பறந்து கார்குழலியை நோக் கிய அவள் பார்வையில் மீண்டும் விஷமம் படர்ந்தது. விக்கிரமன் முகத்தில் சங்கடம் தெரிந்தது.

"தந்தையே, அம்மங்கைக்கு முன்ன தாக எனக்குத் திருமணம் செய்வது சம்பிர தாய விரோதமில்லையா?"

மன்னனது பதில் திடமாக வந்தது. "மக்களுக்கு நலம் தருவதானால் எந்த அரச சம்பிரதாயத்தையும் உடைப்பது தவறாகாது விக்கிரமா!"

இரு இளவரசிகளுமே வெட்கத்துடன் அங்கிருந்து அகன்றனர். அவர்கள் சென்ற பின்னும் இருவரும் சூடியிருந்த மலர்களின் மணம் சற்று நேரம் அங்கு உலவியது. விக்கிரமன், "தந்தையே மதுராந்தகன் எங்கி ருக்கிறான்?" என்றான்.

மன்னனின் பதில் சாவதானமாக வந் தது. "மதுராந்தகன் இதே மதுரையில் தானிருக்கிறான்."

"என்ன? இங்கேயே இருந்து கொண்டா இன்னும் நம்மைக் காண வராம லிருக்கிறான்?" விக்கிரமனின் கேள்வியில் சற்று வேகமிருந்தது.

அவன் முகமாறுதலைக் கவனித்த மன்னன், "நேற்றிரவு மூன்றாவது ஜாமத் தொடக்கத்தில் என்னை வழியிலேயே சந்தித்தான்" என்றான்.

விக்கிரமன் முகத்தில் வியப்பு மறைந்து மெல்லக் கோபம் ஆக்கிரமிக்க ஆரம்பித்தது.

மன்னன் குரல் நிதானமாக ஒலித்தது. "விக்கிரமா! சற்று பொறுமையாகக் கேள். அவன் மார்த்தாண்டனைப் பின்தொடர்ந்து இங்கு வந்திருக்கிறான். மார்த்தாண்டனுக்கு உதவும் சில வலுவான கரங்கள் இங் கிருக்கின்றன. நீ எதற்கும் எச்சரிக்கையுட னிரு. கார்குழலிக்கும் ஆபத்து காத்திருக் கிறது. நீ சென்று காலிங்கராயனை நான் அழைத்ததாகக் கூறி அனுப்பு" என்றான் மன்னன்.

தலைவணங்கி உத்தரவை ஏற்ற இளவல், அறையை விட்டு வெளியே வந்தான்.

உச்சி வானை நோக்கி மெல்ல நகர்ந்து கொண்டிருந்தது நிலா. அதன் மெதுவான நடையைக் கண்டு பரிகசித்த விண்மீன்கள் கண் சிமிட்டி நகைத்துக் கொண்டிருந்தன. இரண்டாவது ஜாமம் நடந்து கொண்டிருந் தாலும் உறங்க மறுத்த மதுரை மாநகரின் பெரும் வீதிகளில் ரதங்களும் புரவிகளும் சென்று வந்தபடியே இருந்தன.

குலோத்துங்க சோழன் அன்று செய்து கொண்ட விஜயாபிஷேகத்தைக் காண வந்திருந்த அயல்நாட்டுத் தூதர்களும், அவர் களுடன் வந்திருந்த உறவினரும், வணிகப் பெருமக்களும் திரம்பி வழிந்ததால் பெரு வீதிகளின் கடைகள் இரவு வெகு நேரமாகி யும் திறந்திருந்தன. முத்தும், ஆபரணங் களும், சிற்பங்களும், பட்டும் விற்பனை யாகிக் கொண்டிருந்தன. மக்கள் நடமாட் டம் குறையவேயில்லை. அன்று அவையில் நடந்தவற்றைப் பேசிக் கொண்டேயிருந் தனர்.

வேத கோஷம் முழங்க, துந்துபிகளும் இதர மங்கல வாத்தியங்களும் ஒலிக்க, திரு நாராயண பட்டரால் விஜயாபிஷேகம் செய் விக்கப்பட்ட குலோத்துங்கன், கவிஞர்களுக் கும் கலைஞர்களுக்கும் அன்று முழுதும் பரிசுகளை வாரி வாரி வழங்கியிருந்தான்.

பாண்டியர் அவை ஜடாவர்ம பாண்டிய ரின் பட்டமகிஷியும், பாண்டிய மகாராணியு மான மங்கையர்க்கரசியைக் கண்டு பிர மித்து நின்றது. நீண்ட காலமாக இருக்கு மிடம் தெரியாது இருந்த மகாராணி, குலோத்துங்கன் அவையில் ரத்னாசனமளிக் கப்பட்டு கௌரவிக்கப்பட்டிருந்ததைக் கண்டு எழுப்பிய வாழ்த்தொலி விண்ணை எட்டியது. வாழ்த்தொலிகள் சற்று அடங்கி யதும் கார்குழலியைத் தன் மகள் என்றும், அவள் மீட்கப்பட்டது பற்றியும் அவையில் கூறிய மங்கையர்க்கரசி, சோழ இளவலை அவள் மணமுடித்து மதுரையின் அரியணை

யில் அரசியாக இருப்பாள் என்பதையும் அறிவிக்கவே மக்கள் உற்சாகம் கரை புரண்டது. அதுவரை மதுரை அரியணை யின் வாரிசுரிமை பற்றிக் குழப்பமோ, சந்தேகமோ பாண்டிய மக்களுக்கு இருந் திருக்குமானால் அது அந்த நொடியில் தீர்ந்து போயிற்று.

கார்குழலியை மணம் செய்து கொண்டு விக்கிரமன் இனி மதுரையை சோழ பாண்டி யன் என்ற பட்டப் பெயருடன் ஆள்வான் என்று அறிவித்த மன்னன் குலோத்துங் கனை, மதுரை மக்களும் நகரப் பிரமுகர் களும் வாழ்த்தொலியாலும், பரிசுகளாலும் திணறடித்தனர்.

**வி**சுவத்தில் ஒவ்வொரு செயலுக்கும் எதிர்மறையான செயலுண்டு. ஓரிடத்தில் மண்ணைத் தோண்டினால் மற்றோரிடத்தில் அதைக் கொட்டத்தான் வேண்டும். ஒருவ ருக்கு இன்பம் விளைவிப்பது மற்றொருவர் துன்பப்பட வழிவகுக்கும். இது இயற்கை நியதி. கொண்டாட்டங்களும் குதூகலமும் நிரம்பி வழிந்த மதுரை மாநகரை விட்டு விலகி, அதன் தென் எல்லையில், மரங்க ளடர்ந்த ஒரு தோப்பின் உட்பகுதியில் அமைந்திருந்த சிறு வீடு, இருளில் மூழ்கி அமைதியாக இருந்தது. அதன் உட்புறத்து அறையில் அமர்ந்திருந்த நால்வரின் முகங் களும் சிறு விளக்கொன்றின் மங்கலான ஒளியில் எதிரிலிருந்த மார்த்தாண்டனை நோக்கின.

''உங்களை நம்பித்தான் இந்தப் பெரும் பொறுப்பை ஒப்படைக்கிறேன்'' என்றான் மார்த்தாண்டன்.

''மார்த்தாண்டரே! இந்த மதுரையின் சிறையில் நான் பத்து ஆண்டுகளாகப் பணி யாற்றுகிறேன். அத்தனை ரகசிய வழிகளும் எனக்குத் தெரியும். ஒரே ஜாம நேரத்தில் நான் மாறவர்மரை வெளியே கொண்டு வந்து விட முடியும். கார்குழலியை ஒழிக்க திட்டமேதுமிருந்தால் கூறுங்கள். சோழன் கட்டுக் காவலை மீறி அவளை ஒழிக்கும் வழிதான் எங்களுக்குப் புலப்படவில்லை'' என்றான் காவலர் உடையணிந்து எதிரிலிருந் தவன்.

மார்த்தாண்டனின் குரல் நன்றாகத் தாழ்ந்தது. ''கலியா, ஜெயதேவா, கவன மாகக் கேளுங்கள். விஜயாபிஷேகம் செய்து கொண்டான் சோழன். நாளை மறுநாள் விக்கிரமனுக்கும் கார்குழலிக்கும் மணம் செய்து அரியணையில் அமர்த்துவது அவன் நோக்கம். ஆனால் அதற்கு முன் திருமண ஊர்வலத்திலேயே அவளை மாய்த்து விட ஒரு திட்டம் வகுத்திருக்கிறேன். அந்தப் பொறுப்பு என்னுடையது. நீங்கள்

கவலைப்பட வேண்டாம். இதோ பாருங்கள்!'' என்ற மார்த்தாண்டன், தன் காலடியிலிருந்து ஒரு தோற்பையை எடுத்தான். துணியில் சுற்றப்பட்ட சிறு அம்புகளிருந்தன அதில். வியப்புடன் அதை வாங்கக் கை நீட்டிய கலியனைத் தடுத்த மார்த்தாண்டன், ''கலியா, எச்சரிக்கை. இவை நன்றாக விஷம் ஏற்றப்பட்டவை. லேசான கீறல் போதும், ஒரு நாழிகையில் உயிர் பறந்து விடும்'' என்றான்.

தொடர்ந்து, ''கலியா, ஜெயதேவா! திருமணம் முடிந்து விக்கிரமனும் கார்குழலியும் ஊர்வலமாக நான்கு மாட வீதிகளிலும் வருவார்களல்லவா?'' என்று கேட்டான்.

''ஆம் தலைவரே. அதுதான் சம்பிரதாயம்'' என்றான் ஜெயதேவன்.

''எல்லாக் கொண்டாட்டங்களும் தடையின்றி நடக்கட்டும். அபாயம் ஏதுமில்லையென்று சோழன் அயரும் சமயத்தில் நம் திட்டத்தை நிறைவேற்றுவோம். தெற்கு மாடவீதியின் திருப்பத்தில் சித்திரைத் தேர் நிற்கிறதல்லவா?''

''ஆம் நிற்கிறது.''

''அதுவும் கோயிலின் மதிலை ஒட்டி இருக்கிறது.''

''ஆமாம்.''

''தேரின் உச்சிப் பகுதியில் மரச் சட்டங்களின் நடுவே இருவர் தாராளமாகக் கால் நீட்டிப் படுக்கலாம். வண்ணச் சீலைகள் அதை மூடியிருக்கின்றன. அங்கிருந்து கார் குழலிக்கும் விக்கிரமனுக்கும் குறி வைப்பது எளிது. பணி முடிந்ததும் நடமாட்டமற்ற கோயிலின் உட்பகுதி தப்பிக்க உதவும்.''

மார்த்தாண்டனது திட்டம் புரிந்ததால் நால்வரும் வாயடைத்து அமர்ந்திருந்தனர்.

''சரி, மாறவர்மனை மீட்க வழி என்ன? அதைச் சொல்லுங்கள்!'' மார்த்தாண்டன் வினவினான்.

கலியன் பதிலளித்தான் : ''தலைவரே, இந்த வீட்டின் பின்பகுதியில் பெரிய கிணறு ஒன்று இருக்கிறது. அதிலிருந்து சிறைக்குள் சுரங்க வழியொன்று செல்கிறது. நீங்கள் கார்குழலியை ஒழிக்கும் அதே வேளையில் நான் இங்கு மாறவர்மரை மீட்டு வருவேன். வாருங்கள், அந்தச் சுரங்க வழியைக் காட்டுகிறேன்'' என்ற கலியன், எழுந்து பின் கட்டை நோக்கி நடந்து சென்றான்.

அவர்கள் ஐவரும் போனபிறகு, இரு நொடிகள் கழித்து பக்கவாட்டு அறையொன்றிலிருந்து ஓசைப்படாமல் வெளி வந்த ஜெயந்தன், வாசல் பக்கமாகச் சென்று தோப்பின் இருளில் பதுங்கினான்.

(தொடரும்)

நீங்கள்
முப்பதைக்
கடந்தவரா....?
இதைப் படிக்க மூன்று
நிமிடம் செலவிடுங்கள்....

# பெண்ணே,



# இந்தச் சோதனை நன்மைக்கே!

அவர் ஓர் அரசு மருத்துவமனையின் நர்ஸ். மார்பில் வலியும் திரவம் வடியும் கட்டியும் உண்டானபோது வெட்கப்பட்டுக் கொண்டு டாக்டரிடம் போகாமலே இருந்து விட்டார். நட்புடன் பழகிய ஒரு பெண் மருத்துவரிடம் மெள்ள மெள்ள விஷயத்தைச் சொன்ன போது, அவர் ஒரு டெஸ்ட் எடுக்கும்படிச் சொன்னார். மார்பகப் புற்றுநோயின் ஆரம்ப நிலை அந்த நர்ஸுக்கு இருப்பது டெஸ்ட் மூலம் தெரிய வந்து, உடனடியாக ஆபரேஷன் செய்யப்பட்டது. நர்ஸ் முழுமையாக குணமடைந்தார். கடந்த பதினைந்து ஆண்டுகளாக ஆரோக்கியமாய் இருந்து வருகிறார்.

கான்ஸர் இருப்பதைக் காட்டிக் கொடுத்த டெஸ்டின் பெயர் பப்பானி கொலா ஸ்டேயின் (Papanicolau stain). அப்பரிசோதனை முறையைக் கண்டு பிடித்த மருத்துவர் பெப்பானிகோலேவின் நினைவாக அவர் பெயரையே அதற்கு வைத்துள்ளார்கள். கர்ப்பப்பை மற்றும் அதன் வாய்ப் பகுதியிலுள்ள புற்று நோயைக் கண்டறியவே இச்சோதனைமுறை பெரும்பாலும் பயனாகிறது. மார்பகப் புற்றுநோயைக் கண்டறிய அரிதாகவே உபயோகமாகிறது. பெண்களுடைய உடலின் ஹார்மோன் நிலையைக் கண்டறியவும் இம்முறை உபயோகப்படுகிறது.

Pap Stain அல்லது Pap Smear சோதனை முறை பற்றி டாக்டர் சுகந்தி ராஜகோபாலன் கூறுகிறார் :

''இந்தப் பரிசோதனை முறையை உடல் உறுப்புகளை எந்த வகையிலும் துன்புறுத்தாமல் (non invasive) மேற்கொள்ளலாம். உடலிலிருந்து வெளியேறும் திரவத்தைச் சேகரித்துச் சோதித்துப் பார்த்தால், அதிலுள்ள செல்களின் அமைப்பு புலப்படும். அதைக் கொண்டு நோய் இருப்பதையும், அந்நோயின் தீவிரத்தையும் உணரலாம். உதாரணமாக, பெண்களின் பிறப்புறுப்பிலிருந்து திரவத்தை எடுத்து பாப் ஸ்டெயின் முறையில் சோதிக்கும் போது, அதிலுள்ள செல்களின் மையக் கரு (nucleus) தெளிவாகப் புலப்படும். புற்று நோய் கண்டுள்ள செல்களாயிருந்தால் அவற்றின் மையக் கரு அளவில் பெரிதாக, வேறுபட்ட தன்மையுடன் தோற்றமளிக்கும்.



''இச் சோதனை முறையில் ஐந்து வகைகளாகச் செல்களைப் பிரிக்கிறார்கள். முதல் வகை - பிரிவு பூஜ்யம். செல்கள் அசாதாரணத் தோற்றத்துடன் இருக்காது. எந்த

அபாயமும் இல்லை. பிரிவு ஒன்று - செல்களின் அமைப்பும் பெருக்கமும் இலேசாக மாறுபட்டிருக்கும். கர்ப்பப் பை வாயில் நோய்த் தொற்று இருப்பதால் இப்படி இருக்கலாம். உரிய ட்ரீட்மெண்ட் எடுத்துக் கொண்டால் குணமாகிவிடும். பிரிவு இரண்டு - செல்களின் அமைப்பு, முதல் பிரிவினுடையதைக் காட்டிலும் அதிக மாறுபாட்டுடன் காணப்படும். எச்சரிக்கை தேவை. பிரிவு மூன்று : புற்றுநோய் என்று வலுவாகச் சந்தேகிக்கக்கூடிய அளவுக்கு செல்களின் அமைப்பு மாறியிருக்கும். பிரிவு நான்கு : மோசமான நிலை. உடனே சிகிச்சை அளிக்காவிட்டால் புற்றுநோயால் இறப்பது உறுதி!

"மேல் நாடுகளில் 25 வயதைக் கடந்த எல்லா பெண்களுமே பாப் ஸ்மியர் சோதனையை ஆண்டுதோறும் செய்து கொள்கிறார்கள். இதனால் புற்று நோயை ஆரம்பக் கட்டத்திலேயே கண்டறிந்து விட முடிகிறது. இந்த நிலையில் சிகிச்சை ஆரம்பித்தால் குணமாக்கவும் முடிகிறது. நம் நாட்டில் கூச்சம் காரணமாகவும் அறியாமை காரணமாகவும் இந்தச் சோதனைமுறை இன்னும் பரவலாக வில்லை. சுமார் ஐம்பது ரூபாய்க்குள் இதற்குச் செலவு செய்தால் போதும். மருத்துவமனையில் அட்மிட் ஆகவோ, அலுவலகத்துக்கு லீவ் சொல்லவோ வேண்டாம். மகப்பேறு மருத்துவரிடம் தனிப்பட்ட முறையிலோ அல்லது 'பதாலஜி லாப்' வசதியுள்ள மருத்தவ மனையிலோ அரை மணி நேரத்துக்கும் குறைவாகச் செலவிட்டால் போதும்.

"குறிப்பாக, மாதவிலக்கில் அசாதாரண மாற்றங்களோ, வெள்ளைப்படுதல் போன்ற அசௌகரியங்களோ ஏற்படும்போது இப்பரிசோதனை முறை சிபாரிசு செய்யப்படுகிறது. அரசாங்கம் இப் பரிசோதனைக்கெனச் சிறப்பு முகாம்கள் நடத்தி, புற்று நோய் உள்ளவர்களைக் கண்டறிந்து இலவச சிகிச்சை அளிக்கும் முயற்சிகளை மேற்கொண்டிருக்கிறது. எனினும் பாப் ஸ்மியர் குறித்து பெரும்பான்மையினர் இன்னும் தெரிந்து கொள்ளவில்லை. அசாதாரண அறிகுறிகள் இல்லாவிட்டாலும் முப்பது வயதைக் கடந்த பெண்கள் பாப் ஸ்மியர் செய்து கொள்வது நடை முறைக்கு வர வேண்டும். அதன் மூலம் நாமறியாமலே நம்முள் கான்ஸர் வளர்வதைக் கண்டறியலாம். எத்தனையோ இழப்புகளையும் சோகங்களையும் தவிர்க்க முடியும்."

- பாலன் பூங்குழலி

---



"மாப்பிள்ளை, ஞானவாச ஊர்வலத்திலே இரட்டை விரலை தூக்கிக் காட்டி ஆட்டிட்டு வாராரே...! அரசியல் ஈடுபாடு ஜாஸ்தின்னு நினைக்கிறேன்...!"

"அப்படி இருந்தாத் தேவலாமே! ஞான வாச ஊர்வலம் முடிஞ்சதும் பேசினபடி ரெண்டு மோதிரம் போட்டுடணும்னு மாமனாருக்கு சிக்னல் காட்டறாரு!"

- எஸ். கோவிந்தன்.

---



"போன வாரம்... நீ நல்லாருக்குன்னு சொன்ன அந்தப் படத்தை, நேற்றுப் போய்ப் பார்த்தேன். படம் சுத்த அறுவையப்பா....!"

"நீ இவ்வளவு நாள் கழிச்சுப் போய்ப் பார்த்தா அதுக்கு நானா பொறுப்பு... போன வாரம் நான் போய்ப் பார்க்கும் போது நல்லாதான் இருந்துச்சு....!"

- கரடிகுளம் ஜெயபாரதிப்ரியா.

## 19

சுஜிதாவிற்குப் பயமும், படபடப்புமாய் இருந்தது. கபாலி கோயிலுக்குப் போயிருக்கிறானா? வரவில்லையே. என்ன ஆயிற்று? ஆக்ஸிடெண்ட் ஏதாவது...? இல்லை. கிடையாது. கிடையவே கிடையாது. நடுவழியில் அவன் சென்ற வாகனம் பழுதடைந்து...? ரங்காவிற்கு வேன் இல்லாவிட்டால் பஸ், ஆட்டோதான். அவளைப் பார்க்க வேனில் வர மாட்டான். என்ன நடந்தது? என்ன நடந்தது? என்ன நடந்தது?

அந்தக் கேள்வி எருமைப் புண் காக்கையாய் அவள் மனதைக் கொத்தியது. மழை நேரத்து ஈயாய் மனதைச் சுற்றிச் சுற்றி ரீங்காரத் தொல்லை கொடுத்தது.

சுஜிதா, விசாலிப்பாட்டியிடம் இருந்து விலகி, மறுபடி ஆட்டோவில் ஏறி கோயிலுக்குப் போனாள். ஒரு போலியான எதிர்பார்ப்புடன், ரங்காவைப் பார்த்து விடும் நப்பாசையுடன், முகத்தில் பயப் புன்னகையுடன் ரங்காவைக் காத்திருக்கச் சொன்ன இடம் நோக்கி விரைந்தாள்.

மண்டபம் காலி. விளக்குகள் எல்லாம் அணைக்கப்பட்டு, தூங்கப் போன கலியாணச் சத்திரமாய் இருந்தது அந்த மண்டபம்.

என்ன ஆயிற்று ரங்காவுக்கு?

''ஹலோ... ரங்கா இருக்காரா?''

''இல்லியே... சாயங்காலம் போனவர் தான். இன்னும் வரலியே?''

ரங்கா ஒன்றும் சின்னக் குழந்தை இல்லை. சுஜிதாவிற்குக் கவலையாய் இருக்கும் என்று அவனுக்குத் தெரியும். பின்னே ஏன் அவளைச் சந்திக்க அவன் முயல வில்லை? முட்டாள் ரங்கா! பொறுப்பற்ற ரங்கா!

சுஜிதா மணிக்கட்டைப் பார்த்தாள். இரவு ஒன்பது முப்பது. ஐயையோ. இந் நேரம் அப்பா அவளைத் தேடி ஒரு படையையே ஏவி விட்டிருப்பாரே.

இரவு மூன்று முறை எழுந்து யாருக்



# மடிமீது தலைவைத்து

கும் தெரியாமல் சபரிக்கு ஃபோன் செய்தாள். ரங்கா வரவில்லை. ரங்கா இல்லை. ரங்கா எங்கே போனான் தெரியவில்லை. சுகிதாவால் தூங்க முடிய வில்லை. மனம் அவ ளுடைய கட்டுப்பாட்டை மீறி என்னென்னவோ சிந் தித்தது. குயில் கூவித் துயில் எழுப்பாமல், இருட்டும் வெளிச்சமுமாய் இருக்கும் நேரத்தில் படுக்கையை விட்டு எழுந்து கொண் டாள்.

அவள் கண் பார்வையில் சிகப்பாய் டெலிஃபோன். அதன் சிகப்பு நிறமே இப் போது அவளை பயமுறுத்தியது. என் னவோ சகுனம் சொல்கிற மாதிரி. என் னவோ ஆபத்தைத் தெரிவிக்கிற மாதிரி. ரிசீ வரை எடுக்கப் போன நேரத்தில் மணி அடித் தது. ரிசீவரை இறுகப் பற்றினாள். அவ ளுடைய நரம்புகள் தெறித்து விடும் அள விற்குப் புடைத்துக் கொண்டன.

''ஹலோ... ஹலோ'' என்று ரிசீவர் வழியாக ஓர் ஆண் குரல் கசிந்தது.

''ஹலோ'' என்றாள் சுகிதா.

''சுகிதா... நான் ரங்கா.''

சுகிதாவிற்கு அழுகை குமுறிக் கொண்டு வந்தது. ஒன்றன் பின் ஒன்றாய் சரப்பட்டாக போல் விம்மல்கள்.

''சுகிதா... என்னது இது கொழந்தை மாதிரி?''

''சொல்லுவீங்க. ஒங்களுக்கென்ன. நான் பட்டது எனக்குத்தானே தெரியும்? ராத்திரி பூரா தூங்காம இருந்தது எனக்குத் தானே தெரியும்? என்ன ஆச்சோ, என்ன ஆச்சோன்னு யோசிச்சி, யோசிச்சி மூளை யில இருக்கிற ரத்தக் கொழா உடைஞ்சி போற மாதிரி ஆனது எனக்குத்தானே தெரி யும்? ஒங்களுக்குக் கொஞ்சங் கூட இதயத் திலே ஈரமே கெடையாது. ஏன், இதயமே கெடையாது. லவ் பண்றாராம் லவ்வு. ஐ ஹேட் யூ. யூ கேர்லெஸ் லோஃபர். இர்ரெஸ் பான்ஸிபிள் சோவிங்கர் ஸ்பெஷல்...''

''அதென்ன அழுகையோட சிரிப்பும் சேர்ந்து வருது?''

''இந்நேரம் என் எதிர்ல இருந்திருந்தா உங்களை அப்படியே... அப்படியே... அப் படியே...''

''அப்படியே?''

''ச்சீ... போடா!''

''ஏய்...!''

''பின்ன என்னவாம்? நான் எவ்வளவு ஏக்கமாக் காத்துக் கிட்டிருந்தேன். அதுவும் தனியா. எனக்கு எப்படி இருந்திருக்கும்? அதுவும் டாடி நம்ம கல்யாணத்துக்கு யெஸ் சொல்லிட்டாருங்கற நியூஸை நான் நேரா உங்க மூஞ்சி பாத்து சொல்லணும்னு எவ் வளவு துடிப்பா இருந்தேன்? அத்தனை யிலும் மண்ணு...''

''நான் ஒன்னைப் பாக்கப் பொறப் பட்டு வெளில வந்தப்ப அமிஞ்சிக்கரை அனாதை இல்லத்தில ஒரு கெழவி இறந்து போய்ட்டான்னு ஒரு பாட்டி வந்து என்னைப் பாத்து அழுதுகிட்டே சொன்னா சுகிதா. செத்துப் போன கெழவிக்கு நான்னா ரொம்பப் புடிக்கும். நான்தான் அவளுக்குக் கொள்ளி வக்கணும்னு அந்தக் கெழவி சொல்லிடிச்சாம். போய் மத்த ஏற்பாடெல் லாம் கவனிங்கன்னு சொல்லிட்டு வந்துட லாம்னுதான் போனேன். அங்க போய் மாட் டிக்கிட்டேன். என்னால நகர முடியல. நானே எல்லா ஏற்பாடும் பண்ண வேண்டி யதாப் போய்டிச்சிம்மா...''

சுகிதாவின் மனத்தில் சட்டென்று இர ளான மேகம் வந்து கவிந்த மாதிரி இருந்தது. ரங்காவோடு அவளும் அமிஞ்சிக்கரை அனாதை இல்லத்திற்குப் போயிருக்கிறாள். சாப்பிட உட்காருமுன் அவர்கள் இறையை வணங்கியது நினைவிற்கு வந்தது.

''யாரு ரங்கா?''

''என்னது?''

''இறந்து போனது யாருன்னு கேட் டேன்?''

''எப்படிச் சொன்னா ஒனக்குத் தெரி யும்? அந்தப் பாட்டிக்கு நல்லா கோலமெல் லாம் போடத் தெரியும்.''

''ரங்கோலிப் பாட்டியா?''

''ம்... ஆமா.''

''அச்சச்சோ...!''

''ஸாரி சுகிதா!''

''எதுக்கு?''

''அதனாலத்தான் என்னால ஒன்னைப் பாக்க வர முடியல்லே.''

''இதுக்கெல்லாம் ஸாரி சொல்லணுமா ரங்கா? நான் ஒங்களைக் கண்டபடி திட்டிட்

சுபா

டேன் இல்லை?''

''நஷ்டஈடு குடுத்துடு!''

''எப்படி?''

''முத்தம்!''

''ஏய்...''

''ஆமா. நஷ்டஈட்டுக்குச் சம்மதம்னா திட்டிக்கோ. வாடா, போடா சொல்லு. என்னவோ பண்ணிக்கோ.''

''நாம எப்பப் பாக்கறோம்?''

''அடுத்த வாரம். இந்த வாரம் முழுக்க நான் கொஞ்சம் பிஸியா இருப்பேன்.''

''அடுத்த வாரம். கல் மனசு. கல் மனசு.''

''முத்தம், முத்தம்!''

கவிதா சிரித்தாள்.

''தொலைஞ்சி போவுது. டாடி சம்மதிக்கலைன்னு சொல்லி உங்களை ஏமாத்த நெனச்சேன் இல்லியா? அதான் விதியே ரங்கோலிப் பாட்டியா வந்து என்னை அல்லாட வெச்சிடுச்சி. உங்களைத் திட்டினதுக்குக் கொடுக்கறேனோ இல்லியோ, உங்களை ஏமாத்த நெனச்சதுக்காவது கொடுத்துடறேன்.''

''நியல்லி?''

''ஆமா.''

''ஐய்யா...! கன்னத்தில இல்ல. உதட்டில''

''சரி.''

''ஐய்யா. ஐய்யா. எப்ப தரே?''

''இப்பவே. ரிசீவர் வழியா. நீங்க எங்க வேணா வாங்கிக்குங்க. பச்.ப்ச்.ப்ச்.''

''ச்சே. அவ்வளவுதானா?''

''ஏப்ரல் ஃபூல். ஏமாந்த ஃபூல். கோ டு ஸ்கூல். காப்பித் தூள்!''

அடுத்த இரண்டு நாட்களும் கவிதா புடைவைக் கடைகளிலும், நகைக் கடைகளிலும், வளையல் கடைகளிலும் நிறைய தென்பட்டாள். பார்த்த பழைய சினிமாக்களில் எல்லாம் கல்யாணப் பெண்கள் எப்படி நடந்து கொள்வார்கள், நண்பிகள் எப்படி கல்யாணப் பெண்ணைப் பரிகசிப்பார்கள் என்று யோசித்துப் பார்த்தாள். அப்பா கல்யாணத்திற்குச் சம்மதித்த சேதியை ஒவ்வொரு தோழியாய் ஃபோன் பண்ணிச் சொன்ன போது பரிமளா ரொம்ப சந்தோஷப்பட்டு அவளை வீட்டுக்கே வந்து பார்த்துக் கட்டிப் பிடித்து கிச்சுகிச்சு மூட்டினாள். தேனாம்பேட்டை காங்கிரஸ் மைதானத்தில் புதிதாய்த் தொடங்கப்பட்டிருந்த எக்ஸிபிஷனில், பாத்திரங்களைக் கழுவுவதற்கென்று கண்டுபிடிக்கப்பட்டிருக்கும் ஒரு புது மெஷின் காட்சிக்கு வைக்கப்பட்டிருப்பதாகச் சொன்னாள். அதைத்தான் அவள் கவிதாவிற்குக் கல்யாணப் பரிசாக

வழங்கப் போவதாகச் சொல்லி, அதைப் பார்க்க வேண்டுமென்று சுதாவை வற்புறுத்திக் கூட்டிப் போனாள்.

பொருட்காட்சியின் நுழைவு வாயில் சந்தோஷ முகங்களுடன் இருந்தது. செயற்கை நீரூற்றில் நீர் பொங்கியது. ஸ்கூட்டர் ஸ்டாண்டில் சின்னச் சின்னச் சந்தோஷக் குடும்பங்கள். திரும்பத் திரும்ப பிக்ஸி டெமான்ஸ்ட்ரேஷனை அகல விழிகளுடன் வெறித்த கும்பல். மெழுகுவர்த்தி நீண்ட நேரம் நின்று எரியத் தயாரிக்கப்பட்டிருந்த பிரத்யேக ஸ்டாண்டு. கலர் கலராய்க் கோல மாவு. பக்கத்தில் ரங்கோலிக் கோலம். பக்கத்தில் ரங்கோலிப் பாட்டி!

சுதா ஸ்தம்பித்துப் போனாள்.

ரங்கா இவளைத்தானே இறந்து போனதாகச் சொன்னான். எவ்வளவு பெரிய பொய்? உலகை விடப் பெரிதான பொய்! அவனுடைய கோபத்தில் இருந்து தப்பிக்க, அவளுடைய நிட்டுக்களிடமிருந்து தப்பிக்க ரங்கா கைக்கொண்ட ஆயுதம். சென்டிமென்டலாய்ச் சொன்னால் அவள் அடங்கி விடுவாள் என்று அவன் எய்த அம்பு!

அப்படியானால் அன்றைக்கு ரங்கா எங்கே போனான்? எதை மறைக்க இவ்வளவு பெரிய பொய்? ரங்கோலிப் பாட்டி அவளைப் பார்க்குமுன் சுதா அந்த ஸ்டால் தாண்டினாள். பரிமளாவிடம் திடீர்த் தலைவலியைக் காரணமாய்ச் சொல்லி விலகி வந்தாள்.

வீட்டில் இருப்புத் தரிக்கவில்லை. அவன் சொன்ன பொய்க்கு நாம் ஏன் நத்தை கூட்டுக்குள் சுருண்ட மாதிரி அடைந்து கொள்ள வேண்டும்? அவனைப் போய் நேரில் பார்த்து சட்டைக் காலரைப் பற்றி 'ஏன் இப்படிப் பொய் சொன்னாய்?' என்று கேட்க வேண்டாம்?

**வாழ்க்கையில் ஏற்படும் சிக்கல்களை நாம் மிகவும் மன அமைதியோடு சமாளிக்க வேண்டும். மன அமைதியை இழந்து, நாம் பதற்றத்தோடு பரிகாரம் காண முயலும் போது அந்தப் பரிகாரங்களே நமக்குப் புதிய பல சிக்கல்களைத் தோற்றுவித்து விடும்.**

சுதா இந்த உண்மையை மனத்தில் கொள்ளாமல் பதற்றத்துடன் அவளுடைய வாகனத்தை எடுத்தாள்.

சபரியை அவள் அடைந்த போது மணி கிட்டத்தட்ட எட்டு ஆகியிருந்தது. தூரத்தில் சபரியை விளம்பரப்படுத்தும் நியான் விளக்கு தெரிந்தது. மரவுரி உடுத்திய ராமனுக்கு இலந்தை ஊட்டிய சபரிக் கிழவி சிகப்பிலும் நீலத்திலும் மாறி மாறி ஒளிர, கீழே 'சபரி உணவு விடுதி' என்ற எழுத்துக்கள் மாறாப் பச்சையாய் ஒளிர்ந்தன. அவள் வண்டியை ஸ்டாண்ட் போட்டு நிறுத்த ஓர் ஓரமாகச் சென்ற போது, சாலையில் சபரியின் வேன் புகையும், தூசியும் கிளப்பிக் கொண்டு அவள் இருந்த இடத்தைக் கடந்தது.

அவள் சபரி நோக்கிப் போய் எதிர்ப்பட்ட ஏதோ ஒரு பையனிடம், ''ரங்கா எங்கடா?'' என்று அவள் கேட்ட தோரணையில், அந்தப் பையன் பயந்து போய், ''வேன்ல போறாருக்கா'' என்றான், பயக் குரலில்.

''எங்க போறாரு?''

''தெரியலைக்கா.''

சுதா உடனே திரும்பி வந்து வண்டியை ஸ்டார்ட் செய்தாள். விடுவதில்லை. முடிவு வரை பார்த்து விடுவது என்று தீர்மானித்திருந்தாள். ரங்காவின் வேனின் சிகப்பு விளக்குகள் தூரத்தில் வலது பக்கம் திரும்பியது தெரிந்தது. ஆக்ஸிலேட்டரைத் திருகினாள்.

ட்ர்ர்ர்ர்ர்ர்ர்.

ரங்காவின் வேன், திருவான்மியூர் தாண்டி, புது மகாபலிபுரம் சாலையில் சென்று இடது பக்கத்தில் இருந்த ஒரு தனிமைச் சாலையில் திரும்பி அடர்ந்த சவுக்குத் தோப்பினூடே சென்று ஓர் ஓரம் ஒதுங்கி நின்றது.

ரங்கா இறங்கினான். சுதா தெரு முனையில் திரும்பியவுடன் தன் வாகனத்தைச் சவுக்குத் தோப்பில் ஒளித்த மாதிரி நிறுத்தி வைத்தான். நெஞ்சில் பட

அடுத்த இதழில்.....

- **கொங்கண் ரயில்வே :**
  - பரபரப்புக்கிடையே ஒரு பயணத் திட்டம்
- **விளம்பர உலகம் :**
  - விந்தைகளின் சங்கமம்!
- **பாரதி ராஜாவுடன் ஒரு பேட்டி!**













படப்பு மிருதுவாக இருந்தது. சூழ்நிலையில் குளிர், காற்று, அலைகளின் ஓலம், கவர்க் கோழிகளின் க்ரீச் எல்லாமே.

கவிதா அலைகளின் சப்தம் வந்த திசை நோக்கி நடந்து, திடீரென எதிர்ப்பட்ட மணற்பிரதேசத்தின் அருகில் திகைத்து நின்றாள். ரங்கா காணவில்லை. அலைகளின் கருமையும் வெண்மையும். மேகத் துணையுடன் சோக நிலவு. கவிதா நெஞ்சைக் கையால் ஒற்றிக் கொண்டு சுற்றிலும் பார்த்தாள். சற்றுத் தள்ளி ஒரு மேடான பிரதேசம் தெரிய, அந்த மேடு நோக்கி நடந்தாள். மேட்டில் ஏறினாள். அது இன்னொரு சவுக்குத் தோப்பின் எல்லை. அங்கிருந்து பார்த்தால் இப்போது ரங்கா தெரிந்தான்.

யாரையோ எதிர்நோக்கி கடல் பார்த்து நின்றிருந்தான். ஒரு கட்டு மரம் கரையில் செருகிய மாதிரி நின்று, அதிலிருந்து இறங்கிய ஒருவன் ரங்காவை ஏறக்குறைய வழி மறிப்பது போல் நின்றான்.

அடுத்த சில வினாடிகளை கவிதா மூச்சு விட மறந்துதான் கழித்தாள்.

ரங்காவிற்கும், கடலோடி வந்தவனுக்கும் இடையில் நிகழ்ந்தது வாக்குவாதமா, கைகலப்பா என்னவென்று புரியவில்லை. வாக்குவாதமாய்த் தெரிந்து கைகலப்பாய் நிகழ்ந்து. ரங்கா அடித்தான். ரங்காவா? அனாதைக் கிழவிகளுக்காக ஆஃபீஸ் ஆஃபீஸாய்ச் சென்று கையேந்துபவனா? குழந்தைகளின் தேவனா? அவனை அடுத்தவன் அவமதித்த போது வாய் வார்த்தையாகக் கூடக் கேட்கத் தயங்கிய,ரங்காவா அடிக்கிறான்?

கடலில் இருந்து கரையேறியவன் கீழே விழுந்தான். ரங்கா அவன் சட்டைப் பை, பாண்ட் பைகளைத் திருடன் போய் ஆராய்ந்து பர்ஸ் மாதிரி தெரிந்த ஒன்றை எடுத்துக் கொண்டு அங்கிருந்து வேக வேகமாக விலகினான். வேன் புறப்படும் சப்தம் கேட்டது.

கவிதா துடிக்கும் இதயத்துடன் மேட்டில் இருந்து இறங்கினாள். கீழே விழுந்து கிடந்தவனை நெருங்கினாள். அவன் அசைவின்றிக் கிடந்தான். கவிதா, ரங்கா போன திசையைப் பார்த்தாள். அவளுடைய மார்பில் சம்மட்டி ஒலிகள். குனிந்தாள். அவன் மூக்கருகே கை வைத்துப் பார்த்தாள். சுவாசம் இல்லை. இறந்திருந்தான்.

ரங்கா அவனைக் கொன்று விட்டான்.

(தொடரும்)



✱ வழக்குப் போட்டால்...

● ப. அப்துல்லா, போடிநாயக்கனூர்.

*? யாருக்கும் தெரியாமல் விடுதலைப் புலிகளைச் சந்தித்துத் திரும்பினாரே, வை.கோ., அப்போதே அவரைக் கட்சியிலிருந்து நீக்கியிருந்தால் தி.மு.க. இப்போது உடைந்திருக்குமா?*

! ஹ்ஊம்... போடிநாயக்கனூர் அப்துல்லாவுக்குத் தெரிந்தது, கலைஞருக்குத் தெரியாமல் போய் விட்டதே!

● அ. சோ. விஸ்வநாதன், காட்பாடி.

*? ஜிம்பாப்வே அணியுடன் மோதிய இந்தியாவின் ஆட்டத்தைப் பார்த்தீரா?*

! ஜெயித்திருக்க வேண்டிய மாட்ச், ஃபீல்டிங்கில் கோட்டை விட்டதால் 'டை'யில் முடிந்தது. ஆனாலும் அடுத்து தென் ஆப்ரிக்காவை வென்றது 'ஆஹா' போட வைத்தது. 'ஆஹா'வுடன் 'ஓஹோ'வும் சேருகிறது - ஷெபி ஃபைனலில் வெற்றி பெற்றதால். அதுவும் சச்சினின் அந்தக் கடைசி ஓவர்... ஆயுசுக்கு மறக்க முடியாதே!

● ஆர். விச்சு, திருப்பத்தூர்.

*? மாறன், மு.க. ஸ்டாலின், அழகிரி இவர்களை நீக்கினால் தி.மு.க.வில் மீண்டும் ஒற்றுமை ஏற்படுமா?*

! அப்புறம் கலைஞரின் குடும்ப ஒற்றுமை என்ன ஆவது, மிஸ்டர் விச்சு!

● ஆர். இளமாறன், சீர்காழி.

*? உச்சநீதி மன்றம் சேஷனுக்கு முழு அதிகாரம் தந்துள்ளதே, பயன்படுத்திக் கொள்வாரா?*

! கொள்ளாமல் என்ன! இல், கால் கடிதாக தந்து விட்டு வீட்டுக்குப் போய் விட்டார்; கிருஷ்ணமூர்த்தி நீண்ட விடுமுறையில் கம்பி நீட்டி விட்டார்; ஹி.பி. ஆளுனர் குல்ஷர் அஹமது, தேர்தலில் வேட்பாளரான மகனுக்கு உதவியதாகக் குற்றம்சாட்டப் பட்டதில் ராஜினாமா செய்து விட்டார்; போதாதா?

● வைத்யா, திருவெண்ணெய்நல்லூர்.

*? மைக்கேல் ஜாக்ஸனின் பயணம் திடீரென்று ரத்தாகி விட்டதே?*

! அவர் மீது சுமத்தப்பட்டுள்ள கொடிய குற்றச்சாட்டு உண்மையோ பொய்யோ தெரியாது. ஆனால் அவர் மனநலம் பாதிக்கப்பட்டு மருந்துகளுக்கு அடிமையாகி இப்போது எல்லாவற்றுக்குமாகச் சிகிச்சை பெற்று வருவது உண்மை எனத் தெரியவருகிறது. குணமான பிறகு இந்தியா வந்து, வாக்கைக் காப்பாற்றும் வாய்ப்பு உண்டு. வழக்குப் போட்டால் அந்த வாய்ப்பும் கை நழுவிப் போய் விடலாம்!



✱ மலை போல் நிதி...

● ஏ. எஸ். ராஜ்குமார், மதுரை.

*? லேட்டஸ்ட் ஜோக்?*

! ''வை.கோ. முதல்வரிடம் பணம் வாங்கியதால்தான் இப்படிப் பேசுகிறாராமே?'' என்ற உங்கள் முந்தைய கேள்வி.

**'ஜெ' வேண்டுகோள் விடுத்தால், நிதி மலைபோல் குவிகிறதே?**

● அன்பின் ஜெபா, கடையநல்.

*? கி.பி. 2000 ஆண்டுக்குள் சென்ட்ரல் - மைலாப்பூர் இடையில் மாடி ரெயில் வந்தால் மொட்டை அடித்துக் கொள்வதாக சுஜாதா கூறுவது...?*

! ஸேஃப் பெட்!

● எம். கருணாகரன், சென்னை - 33.

*? 69 சதவீத ஒதுக்கீடு அவசியம்தானா?*

! ஒதுக்கீடு அவசியமில்லை என்பது நமது வாதமல்ல. ஆனால் அதை நிரந்தரமாக்கு வதும் படிப்படியாகக் குறைக்க முயற்சிப் பதற்குப் பதில் அதிகமாக்கிக் கொண்டே போவதும் தவறு என்பதுடன், பிற்படுத்தப் பட்டவர்களை முன்னேற்ற சிறப்புத் திட்டங்கள் இல்லை என்பதும் நமது ஆட் சேபணை. எவ்வளவோ முன்னேற்றமடைந் துள்ள அமெரிக்காவில் கூட, அயல்நாட்டி லிருந்து வந்து குடியேறியுள்ள பல பின்தங் கிய மக்களுக்காகச் சிறப்புக் கல்வி நிலை யங்கள் உள்ளன. அவற்றில் பணியாற்றும் ஆசிரியர்களுக்கு அதி சிறப்புப் பயிற்சி அளிக்கப்படுகிறது. இங்கேயோ, ராஜீவ் காலத்தில் கூட Centres for excellence தான் தோற்றுவிக்கப்பட்டன. தஞ்சை சிவானந் தம் (வட்டமேஜை) போன்றோர் இதைப் புரிந்து கொண்டால் நல்லது.

● எல். ஆர். விஜயகுமார், சென்னை.

? ஜெயலலிதா ஒரு வேண்டுகோள் விடுத்


★ சேஃப் பெட்!


★ தூக்கு பட்டாளும்...


★ முழு அதிகாரம்!

தால், நிதி மலை போல் குவிந்து விடுகிறதே?

! கோலோடு நின்றான் இரவு. நன்கொடை அள்ளி அளிப்பவரும் நாளை அவரிடம் கை யேந்தி பலன் பெறுவார்கள்.

● ஆர். சசீந்தர், திருவாரூர்.

? எம்.பி.ஏ. பட்டப் படிப்பில் 'லஞ்சம் வாங்குதல்' என்ற புதிய துறையை ஏரல் நாட்டுப் பல்கலைக் கழகம் சேர்த்துள்ள தைப் பற்றி...?

! இங்கே பல்கலைக் கழகத்துக்குள் (கல் லூரிக்குள்) நுழையும்போதே லஞ்சம் கொடுக்கல் வாங்கல் எல்லாவற்றிலும் நேரடி அநுபவரீதியான தேர்ச்சி பெற்று விடுவதால் தனியே பாடத் திட்டம் தேவை யில்லை! ●

● ரமா ரகுநாத், திருச்சி. ❑

? மிக்ஸி, ஃப்ரிஜ், வாஷிங்மிஷின் இவற் றாலேயே பெண்களுக்கு முழுச் சுதந்திரம் கிடைத்து விடுவதாக விளம்பரங்கள் வரு வது பெண்மையை மேலும் இழிவு படுத்து வதாகத் தோன்றவில்லையா?

! ரமா ரகுநாத்தைப் போல் எல்லா சகோதரிகளுமே சிந்திப்பதில்லை என்பது தான் இத்தகைய விளம்பரதாரர்களின் பலம்.

● ஜோ. ஜெயக்குமார், நாட்டரசன் கோட்டை.

? 'வை.கோ. மேல் சிறு தூசு பட்டாலும் கலைஞர் குடும்பத்தாருக்கு வெள்ளைச் சேலைகள் தேவைப்படும்' என்று வை. கோ. ஆதரவாளர் முழக்கிவது பற்றி...?

! அது அநாகரிகத்தின் உச்சகட்டம் என்ப துடன், கிட்டத்தட்ட அந்த அளவுக்கு வெறி பிடித்தும் அலைகிறார்கள் என்பதை, ''கலைஞர் வாழ்க'' என்று கோஷமிட்டவர், கத்திக் குத்துக்களுக்கு ஆளானது நிரூபிக் கிறது. அதிலும் வை.கோ. சென்ற காருக்குப் பின்னால் சென்ற காரிலிருந்து இறங்கிய அவர் அணியினர் பலர் இவரைச் சூழ்ந்து தாக்கி... சே! ஜனநாயகமா இது!

● யோகஸ்ரீ ராஜ், பம்பாய்.

? எந்த வேலை கலபமானது?

! உபரியாகக் கிடைக்கும் ஏழு லட்சம் லிட்டர் பாலைக் கடலில் கலக்கச் செய்வது மகா ராஷ்டிர பால்வள அபிவிருத்தித் துறைக்கு எளிதானது. ஆனால் அதை வீணடிக்காமல் பயன் படுத்துவது அல்லது ஏழைகளுக் கேனும் விநியோகிப்பது கஷ்ட மானது. அரசுத் துறை கலபப் பாதையை விடுத்து, சிரமமான வழியில் சென்றதாகச் சரித்திரம் இல்லை!

● இராம. முருகானந்தன், காரைக்குடி.

? இந்த உலகத்திலேயே விசித்திரமாக இருப்பது எது?

! டில்லி - சென்னை ஃப்ளைட்டில் வந்த பெண்மணி, விமானம் ஹைதராபாத்தில் ஐம்பது நிமிஷம் நின்றபோதிலும் இறங் காமல் உறங்கி விட்டாராம். விமானம் மறு படி மேலே உயர முற்பட்டபோதுதான் விழித்துக் கொண்டாராம்! விமானம் மறு படி நிலையம் சேர்ந்து அவரை இறக்கி விட்டு விட்டு மீண்டும் புறப்பட்டு சென்னை வந்து சேர ஒரு மணி நேரம் லேட்! தலைகளை எண்ணுவதில் கூட நமது இந்தியன் ஏர்லைன்ஸ் பணியாளர்கள் குழப் படி பண்ண முடியும் என்பது உலக மகா விசித்திரமே!

❑ ரூ 25 பரிசு பெறுபவர் :
ரமா ரகுநாத்,
26A, சுந்தரதாஸ்குளத் தெரு,
திருச்சி - 620 008.

## 61. வானரர்கள் தேடிச் சென்றார்கள்

"இதோ பார்! ராமனே, இந்தக் கோடிக் கணக்கான வானரர்களடங்கிய சேனை முழுதும் உன்னுடைய சேனை; இந்த அபூர்வ பலம் கொண்ட வானரர்கள் அனைவரும் உன்னுடைய ஆட்கள், உன் பணியைக் குறைவறச் செய்யும் ஆசையும் பலமும் பெற்றவர்கள். நீ இடும் ஆணையைச் செய்து முடிப்பவர்கள். இந்தப்பெருஞ் சேனையை உன் பொருளாகவே கருதி என்ன வேண்டுமோ அதைச் செய்ய உத்தரவிடுவாய்" என்றான் சுக்ரீவன்.

"முதலில் கண்டறிய வேண்டியது சீதை உயிரோடிருக்கிறாளா, எங்கே இருக்கிறாள், ராவணன் எங்கே இருக்கிறான் என்பதை. பிறகு செய்ய வேண்டியதைச் செய்வோம். இந்தச் சேனைக்கு உத்தரவு இட வேண்டியவன் நீதான். நானாவது, லக்ஷ்மணனாவது அல்ல. அரசன் நீ. தவிர நீதான் எல்லாம் அறிந்து செய்ய வேண்டியதைச் செய்யத் தெரிந்தவன். உன்னைப் போன்ற ஒரு நண்பன், தம்பி லக்ஷ்மணனோடு எனக்குக் கிடைத்த பாக்கியத்தை நான் என்னவென்று சொல்வேன்!" என்றான்.

பிறகு சுக்ரீவன் தன் சேனாதிபதிகளுக்குக் கண்டிப்பான ஆணையிட்டான் : நான்கு திக்குகளுக்கும் தன் பெருஞ்சேனையையும் தலைவர்களையும் பிரித்து ஒரு இடம் விடாமல் நன்றாகப் பார்த்துச் சீதையைத் தேடும்படி கடுமையான உத்தரவிட்டு அனுப்பினான்.

வானரத் தலைவர்கள் அனைவரையும், பல திசைகளுக்கு அனுப்பித் தேடச் சொன்ன பின் ஹனுமானைத் தனியாகக் கூப்பிட்டு சுக்ரீவன் சொன்னான் :

"வாயுகுமாரனே! நீயே இந்தக் காரியத்தை முடித்துக் கொடுக்கக் கூடியவன். உன் தந்தையின் வேகமும் தேஜஸும் நீ பெற்றிருக்கிறாய். உனக்குச் சமமாக வேறு யாரும் உலகில் இல்லை. உன்னைத்தான் நான் இந்தப் பெருங் காரியத்தில் நம்பியிருக்கிறேன். பலம், புத்தி, பராக்கிரமம், உபாயம், அறிவு அனைத்தும் உன்னிடமிருக்கிறது. உனதே இந்தப் பொறுப்பு" என்றான்.

ஹனுமானால் காரியம் சித்தியாகும் என்று ராமச்சந்திரனும் உணர்ந்தான்.

## சக்கரவர்த்தித் திருமகன்

எந்த இடையூறு நேர்ந்தாலும் இவன் அதற்குப் பரிகாரம் கண்டு செய்ய வேண்டியதைச் செய்து முடிப்பான் என்று உணர்ந்தான். தன் சொந்த மோதிரத்தை ஹனுமானிடம் தந்து, "இதை வைத்துக் கொள்வாய். உன்னால் சீதை கண்டு பிடிக்கப்படுவாள். அவளுக்கு இதைக் காட்டினாயானால் என் தூதன் என்று அவளுக்கு உறுதியாகும். சீதையை நான் மறுபடி அடையும்படிச் செய்வாயாக!" என்று அன்போடும் பூரண நம்பிக்கையுடனும் ராமன் ஹனுமானைக் கேட்டுக் கொண்டான். சீதைக்காக வாடி, துயருற்ற ராமன் ஆஞ்சனேயனுக்கு மோதிரத்தைத் தந்த காட்சியை யாரே எழுதிக் காட்ட முடியும்? பூரண நம்பிக்கையுடன் தந்தான். வாயு புத்திரனும் மோதிரத்தைப் பக்தியுடன் வாங்கிக் கொண்டு ராமச்சந்திரனை வணங்கி விடைபெற்றுக் கொண்டு சென்றான்.

சுக்ரீவன் தன் வானரப் படைக்கு மிகக் கண்டிப்பான ஆணையிட்டான். 'எப்படியாவது சீதையைக் கண்டு பிடிக்கவேண்டும். எங்கே ஒளித்து வைக்கப்பட்டிருந்தாலும் உங்களால்



கண்டு பிடிக்க முடியும்; ஒரு மாதத்துக்குள் கட்டாயம் திரும்பி வந்து என்னிடம் செய்தி சொல்ல வேண்டும்' என்று ஆணையிட்டு அனுப்பினான். அவர்களும் புற்றிலிருந்து ஈசல் கிளம்புவது போல் கிளம்பி நான்கு திக்கிலும் சென்று விட்டார்கள்.

சதபலி என்கிற வானர வீரன் தன் சேனையுடன் வடக்கே சென்றான். வினதன் அவ்வாறே கிழக்கு நோக்கிச் சென்றான். சுஷேணன் மேற்கே தேடப் போனான். ஆஞ்சனேயன், அங்கதன், தாரன் தெற்கு நோக்கிச் சென்றார்கள்.

எல்லாரும் மிக உற்சாகமாகச் சென்றார்கள். எங்கிருந்தாலும் இந்தத் திருடன் ராவணனைக் கொன்று சீதையை மீட்டுக் கொண்டு வருவோம் என்று ஒருவரை ஒருவர் முந்திக் கொண்டு உற்சாகமாக கோஷம் செய்து கொண்டு சென்றார்கள்.

**"இ**ந்தப் பூமி முழுதும் நேரில் கண்டபடி ஒவ்வொரு திக்கிலிருக்கும் பிரதேசத்தையும் நீ உன் படைவீரர்களுக்கு விளக்கிச் சொன்னாயே; இவ்வளவையும் நீ எப்படிக் கண்டாய்? எப்போது கண்டாய்?" என்று ராமன் வானரர் தலைவன் சுக்ரீவனைக் கேட்டான்.

"ஐயனே! நான் வாலியால் திரும்பத் திரும்பத் துரத்தியடிக்கப் பட்டேனல்லவா! நான் எங்கே சென்றாலும் அவன் என்னைத் துரத்திக் கொண்டு வருவான். உலகம் முழுதும் நான் இப்படி அலைந்தேனல்லவா? அந்தக் காரணத்தால் எனக்கு இந்தப் பூமண்டலத்தில் ஒவ்வொரு பாகமும் நேரில் காணச் சந்தர்ப்பம் ஏற்பட்டது. பிறகு இந்த மாதங்க ரிஷி ஆசிரம பூமியைப் பற்றி அறிந்தேன். இந்தப் பிரதேசத்திற்குள் வாலி நுழைந்தானானால் ரிஷியின் சாபத்தால் அவன் தலை வெடித்துப் போகும். அந்தக் காரணத்தால் அவன் இந்த இடம் வர மாட்டான், வந்தாலும் எனக்கு அபாயமில்லையென்றறிந்து இவ்விடம் மறைந்து பிழைத்தேன்" என்றான்.

ராஜாஜி

**வா**னரப் படைகளில் வடக்கும் கிழக்கும் மேற்கும் போன

வர்கள் ஒரு மாதம் தேடிப் பார்த்து விட்டு சீதையைக் காணாமல் திரும்பி வந்து வானர ராஜனிடம் விஷயத்தைச் சொல்லி வணங்கினார்கள்.

''காடுகள், மலைகள், ஆறுகள், நகரங்கள் எல்லாம் ஜாக்கிரதையாகத் தேடிப் பார்த்து விட்டோம். எங்கும் காணவில்லை. ஜானகியின் இருப்பிடத்தைக் கண்டு பிடித்துத் திரும்பிவர எங்களுக்கு பாக்கியமில்லாமல் - தெற்கே போயிருக்கும் ஹனுமானுக்கே அந்த அதிர்ஷ்டம் போலிருக்கிறது. அரக்கன் சீதையைத் தூக்கிப் போனதும் தென் திசை நோக்கியே அல்லவா? ஹனுமான் இன்னும் திரும்பி வரவில்லை'' என்றார்கள்.

இதைக் கேட்டுக் கொண்டிருந்த ராமன் வானரர்கள் செய்து வந்த முயற்சிகளைப் பற்றித் திருப்தியடைந்தான்.

**ஹ**னுமானும் அங்கதனும் தெற்கே தேடிக் கொண்டு சென்றார்கள். விந்திய மலைக்குகைகளிலும் வனங்களிலும் புகுந்து எல்லாவிடங்களையும் தேடிப் பார்த்தார்கள். பிறகு ஒரு பெரும் பாலைவனத்தைக் கண்டார்கள். அவ்விடம் ஒரு ரிஷி தவம் செய்து கொண்டிருந்தார். அவருடைய சாபத்தால் அவ்விடம் ஒரு மரமும் செடியும் மிருகங்களும் பக்ஷிகளுமில்லாமல் சூன்யமாக இருந்தது. அங்கேயும் தேடிப் பார்த்து விட்டுப் பிறகு வேறு பிரதேசம் சென்றார்கள். அங்கே ஒரு பெரிய அசுரனைக் கண்டார்கள். மகா கொடியவனான அந்த அசுரன் வானரங்கள் கூட்டமாக வருவதைக் கண்டு நல்ல போஜனம் கிடைத்தது என்று சந்தோஷமாக அவர்களைப் பிடிக்கத் தாவினான்.

தங்களை எதிர்த்த அரக்கன் ராவணனாகத்தான் இருக்க வேண்டும் என்று எண்ணினார்கள். அங்கதன் அவன் மேல் பாய்ந்து ஒரு அறை அறைந்தான். அந்த அடியைத் தாங்காமல் அரக்கன் ரத்தம் கக்கிக் கொண்டு கீழே ஒரு மலை போல் விழுந்தான். வானரர்கள் ராவணன் செத்தான் என்று மகிழ்ச்சி அடைந்து பிறகு காடு முழுதும் சீதையைத் தேடிப் பார்த்தார்கள். சீதையாவது ஒரு அறிகுறியாவது காணவில்லை. பிறகு வேறு இடங்களைத் தேடிச் சென்றார்கள்.

**ப**ல சமயங்களில் எவ்வளவு தேடியும் பயன் காணவில்லையே என்று உற்சாகம் இழந்து வருத்தப்பட்டு உட்காருவார்கள். பிறகு அங்கதன், கந்தமாதனன் முதலியோர் தைரியம் சொல்லி மறுபடியும் தேடிச் செல்வார்கள். இப்படிப் பல நாட்கள் கழிந்து விட்டன. சீதையைக் காணவில்லையே, சுக்ரீவனோ கடுமையான தண்டனை விதித்து விடுவானே, என்ன செய்வது என்று ஏக்கமடைந்தார்கள். இப்படித் தெற்கு நோக்கிப் போன வானரர்கள் வெகு தூரம் தேடிக் கொண்டே சென்றார்கள்.

பசியாலும் தாகத்தாலும் வாட்டப்பட்ட இந்த வானரப் படையினர் ஒரு பெரிய குகையைக் கண்டார்கள். அந்தக் குகையிலிருந்து அநேக வகைப் பறவைகள் சந்தோஷமாக வெளி வந்து கொண்டிருந்தன. உடல் முழுவதும் தாமரை புஷ்பத்து மகரந்தப் பொடி பூசிய நீர்ப் பறவைகளைக் கண்டும் நல்ல வாசனையோடு காற்று வீசுவதை உணர்ந்தும், 'இந்தக் குகைக்குள் தண்ணீர் இருக்கும்; உள்ளே புகுவோம்' என்று தாகத்தால் மிக வருந்திய வானரர்கள் புகுந்தார்கள்.

பேரிருள் மூடியிருந்த அந்த குகைக்குள் வானரர்கள் ஒருவர் கையை ஒருவர் பிடித்துக் கொண்டு மெள்ள வெகு தூரம் சென்றார்கள். வானரர்களில் சிலர் மிகக் களைத்துப் போய், 'ஐயோ! தாகம் தாகம்' என்று கூப்பிட்டுக் கொண்டே சென்றார்கள். வெகு தூரம் இப்படி இருட்டிலேயே சென்ற பிறகு திடீர் என்று வெளிச்சம் தோன்றி மிக ரம்மியமான வனத்தைக் கண்டார்கள். போகப் போக மிக அதிசயமான மாளிகைகளும் எல்லாவித செல்வமும் நிறைந்த நகரத்தைக் கண்டார்கள். தங்க மயமாக அற்புத அழகோடு தெருக்களும் மாளிகைகளும் சொல்ல முடியாத செளந்தர்யம் கொண்டு பிரகாசித்தன.

அங்கே ஓரிடத்தில் மரவுரி தரித்து மான் தோல் விரிப்பு மேல் உட்கார்ந்

---

## பூகம்பம் பேரைச் சொல்லி....

**கோ**ழிக்கோட்டில் உள்ள 918 ரேஷன் கடை அதிபர்களிடம் பூகம்ப நிதிக்காகக் கேரள அரசு ரூ. 91,800 வசூலித்தது. இதைப் பெற்றுச் செல்ல திருவனந்தபுரத்திலிருந்து வந்து போன அதிகாரிகளுக்குத் தேவையான வசதிகளைச் செய்து தர ஆன செலவு ரூ. 22,000! ஏறத்தாழ வசூல் தொகையில் 25 சதம்! இந்தத் தொகை மீண்டும் ரேஷன் கடை அதிபர்களிடமே வசூலிக்கப்பட, அவர்கள் வெறுப்படைந்து போர்க்கொடி உயர்த்தியிருக்கிறார்கள்!

- எஸ்.எஸ். மணி.

இருந்த ஒரு வயோதிக ஸ்திரீ தபஸ்வியைக் கண்டார்கள். அவள் முகத்தின் திவ்விய தேஜஸைப் பார்த்து வானரர்கள் நடுங்கினார்கள்.

ஹனுமான் தைரியம் செய்து கொண்டு தபஸ்வினியை வணங்கிப் பேசலானான் : ''தாயே, நமஸ்காரம்! தாங்கள் யார்? இந்த விசித்திரக் குகையைப் பற்றியும் தங்களைப் பற்றியும் சொல்ல வேண்டும்! நாங்கள் மிகப் பசியும் தாகமும் களைப்புமாக இந்த இருள் மூடிய குகைக்குள் புகுந்தோம். தண்ணீர் கிடைக்கும் என்று ஆசைப்பட்டு உள்ளே நுழைந்தோம். இங்கே தங்க மயமான விசித்திர மாடமாளிகைகளும் மரங்களும் குளங்களும் பார்த்து எங்களுக்குப் பயம் உண்டாகிறது. விஷயத்தைச் சொல்லி எங்கள் பயத்தைப் போக்க வேண்டுகிறேன்'' என்றான்.

''வானரர்களே, நீங்கள் இந்த இருள் மூடிய குகை வாயிலை எப்படிக் கண்டு எவ்வாறு உள்ளே பிரவேசித்தீர்கள்? இங்கே உங்களுக்கு வேண்டிய தண்ணீரும் ஆகாரமும் இருக்கின்றன. பசியும் களைப்பும் தீர்த்துக் கொள்ளுங்கள். இந்த அழகிய மாளிகை தானவர்களுடைய விசுவகர்மாவான மயன் நிர்மாணித்தது. அவன் சுக்ராச்சார்யரிடம் நிர்மாண வேலையை நன்றாகக் கற்றவன். அவன் இங்கே வெகுகாலமிருந்தான். பிறகு அவன் மேல் இந்திரன் பகை கொண்டு அவனை வதம் செய்து விட்டான். அதன்பின் இந்த பொன் மயமான மாளிகையை இந்திரன் ஹேமை என்கிற என் தோழி அப்சரஸுக்குக் கொடுத்தான். இந்த மாளிகைகள், உத்யானவனங்கள் முதலியவற்றுக்கு அவளே உடையவள். அவள் இப்போது தேவலோகம் சென்றிருக்கிறாள். உங்கள் காரியம் என்ன? ஏன் இந்த மாதிரி காடுகளில் திரிந்து களைப்படைந்தீர்கள்? பசியும் தாகமும் களைப்பும் தீர்த்துக் கொண்டு விவரமாகச் சொல்லுங்கள்'' என்று அவர்களுக்கு ஆகாரமும் பானமும் வேண்டியளவு அமைத்துக் கொடுத்தாள்.

எல்லாரும் நீர் அருந்தி, நன்றாகப் புசித்து, மகிழ்ச்சியடைந்தார்கள். பிறகு ஹனுமான் வணக்கத்துடன் தபஸ்வியம்மைக்குக் காரியத்தை எடுத்துச் சொன்னான்.

''தசரதன் குமாரன் ராமன் பூமண்டலத்துக்கு அதிபதியானவன். அவன் தன் தம்பியுடனும் மனைவியுடனும் ஒரு காரணமாக ராஜ்ய பதவியை விட்டு வனவாசம் செய்து கொண்டிருந்தான். அப்போது அரக்கன் ஒருவன் ராமனுடைய மனைவி சீதையைத் தூக்கிக் கொண்டு போய் விட்டான். அவளைத் தேடிக் கொண்டு ராமனும் லக்ஷ்மணனும் வந்தார்கள். வானர ராஜன் சுக்ரீவன் அவர்களுக்கு நண்பனாகி விட்டான். ராமனுக்காக சீதையைத் தேடும்படி எங்களை வானர ராஜன் ஆணையிட்டனுப்பினான். அவன் இட்ட காலவரை இந்தக் குகையில் நாங்கள் வழிதெரியாமல் அலைந்து கொண்டிருந்த காலத்தில் தாண்டி விட்டது. இப்போது எங்களுக்கு ஒன்றும் தோன்றவில்லை. எங்களுடைய அரசன் சுக்ரீவன் மிகக் கண்டிப்புக்காரன். அவன் இட்ட வேலையைக் குறித்த காலத்தில் செய்யவில்லையென்கிற காரணத்தால் எங்களைக் கொன்று விடுவான்'' என்று ஹனுமான் சொன்னான்.

தபஸ்வியம்மை இதைக் கேட்டு, ''நீங்கள் இப்போது வெளியில் போக முடியாதே! இந்தக் குகையின் சக்தி உங்களுக்குத் தெரியவில்லை. இதில் பிரவேசித்த அன்னியர்கள் மறுபடி வெளியில் உயிருடன் செல்ல முடியாது. மாண்டு போவார்கள். உங்கள் காரியமோ பெருங்காரியம். ஆனபடியால் கண்களை மூடிக் கொள்ளுங்கள். நான் என்னுடைய தவ வலிமையால் உங்களை வெளியேற்றுகிறேன்'' என்றாள்.

அவர்கள் அவ்வாறே கண்களை மூடிக் கொண்டார்கள். உடனே தபோபலத்தினால் கடற்கரையில் போய்ச் சேர்ந்து விட்டார்கள்.

(தொடரும்)

## நினைவூட்டுகிறோம்!

**பொள்ளாச்சி வாசகர்களே!**

**உங்கள் நகரம் பற்றிய செய்திகள், கட்டுரைகள், துணுக்குகளை 10.12.93 க்கு முன்னதாக எழுதி அனுப்புங்கள். உங்கள் தயாரிப்பில் பொள்ளாச்சி சிறப்பிதழ் அமர்க்களமாக உருவாகட்டும்!**

**- ஆசிரியர்.**

## வட்ட மேஜை

# 'தடா'வில் தள்ளிவிடப் போகிறார்கள்!

◆ 'பிற்படுத்தப்பட்டோருக்கு முதலைக் கண்ணீர்' தலையங்கம் கண்டேன். காவேரி நதிநீர் பிரச்னையில் கர்நாடக அரசு நீதிமன்றத் தீர்ப்பை அமல்படுத்த வேண்டும் என்று முழங்கிய அரசியல் தலைவர்கள் இன்று இட ஒதுக்கீடு பிரச்னையில் நீதிமன்ற ஆணையை எதிர்த்து நிற்கிறார்கள். தங்கள் வோட்டு வங்கியை பலப்படுத்த, பந்த் நடத்தி தமிழகத்தைப் பல கோடி ரூபாய் நஷ்டத்தில் தள்ளுகிறார்கள்.

கும்பகோணம், ஆர். ஸ்ரீதரன்.

◆ ஒதுக்கீடு, பிற்பட்டவர்களில் ஏழைகளைச் சென்று அடைவதில்லை. முற்பட்ட வகுப்பினரிலும் ஏழைகள் உள்ளனர். எனவே ஒதுக்கீடு, பொருளாதார அடிப்படையிலும் அமைய வேண்டும் என்று சொல்லுங்கள்.

சாத்தூர், இரா. பிரபு ஆனந்த்.

◆ கதவடைப்பினால் பொருளாதாரம் பாதித்து விட்டது என்று 'முதலைக் கண்ணீர்' வடிக்கிறீர்கள். இட ஒதுக்கீட்டை எதிர்ப்பவர்கள் எல்லாம் உயர்சாதியினர், ஆதரிப்பவர்தான் பெரும்பான்மையாக (80 சதவிகிதம்) உள்ளனர். ஆகையால் பெரும்பான்மையோர் மனதையும், நலத்தையும் குலைக்காதீர்கள்.

தஞ்சை, சிவானந்தம்.

◆ வாழப்பாடி தாக்குப்பிடிக்கிறாரோ, இல்லையோ, அது வேறு விஷயம். இன்றைய ஊழல் மிகுந்த, நிர்வாகத் திறன் கெட்ட, அகம்பாவம் பிடித்த தமிழக அரசிற்குத் தற்போதைய சூழ்நிலையில், வாழப்பாடி போன்ற எதிர்க் கட்சித் தலைவர்கள், சிம்மசொப்பனமாக விளங்குவதே நல்லது என்பதே பெரும்பாலானவர்களுடைய கருத்து.

சிதம்பரம், என்.ஆர். பாஸ்கரன்.

◆ அருகம்புல் ஜூஸ் பற்றிய கட்டுரையைப் படித்ததும் நான் தினசரி காலையும் மாலையும் அருந்தும் காப்பி, டீயை விட்டொழித்து இனி அருகம்புல் ஜூஸ் குடிப்பதென முடிவு செய்து விட்டேன்! இம்மாதிரி இயற்கை உணவுகளின் மேன்மையை எல்லோரும் பொது மக்களிடம் எடுத்துரைக்க முன்வர வேண்டும்!

மதுரை - 16, வி. பி. மகராசி.

◆ மேடை நாயகர் சாலமன் பாப்பையா பேசுவதைப் போலவே அவர் எழுதுவதும் படிக்கச் சுவையாக இருக்கிறது. நாட்டு நடப்பை ஒட்டி, சர்ப்போடு சிந்தைக்குரிய விதமாக இருப்பது, பாராட்டுக்குரியது.

திருப்பால், பழ. பூங்குழலி.

◆ தில்லு-ஜாலுவின் கூட்டணி அட்டகாசமெல்லாம் அதிகமாகிக் கொண்டே போகிறது. 'தடா'வில் தள்ளி விடப் போகிறார்கள் ஐயா, ஜாக்கிரதை!

பொன்மலை, துரை. நாகராஜன்.

◆ ஓடாத படத்தை ஓட வைக்க நடிகை குஷ்கலாவும், தயாரிப்பாளர் வில்வேஸ்வரனும் ஆடிய நாடகத்துக்குத் தாளம் போடும் பத்திரிகையெல்லாமாகச் சேர்ந்து மக்களை முட்டாளாக்குவது நல்ல வேடிக்கை. மதுமனோ இன்றைய சினிமா உலகத்தை அருமையாகப் படம்பிடித்துக் காட்டி விட்டார்.

கும்பகோணம், பவானி கிருஷ்ணா.

◆ மோகன் ராஜின் 'தத்வமஸி' எங்களுக்கு ஆயிரம் தத்துவங்களைப் புரியவைத்தது. பெண்களின் அவசர புத்திக்கு முற்போக்கு முலாம் பூசுவது எவ்வளவு மூடத்தனமானது என்பதைக் கதாசிரியர் கச்சிதமாகச் சொல்லியுள்ளார்!

சேலம், மு. இரவிச்சந்திரன்.

◆ 'காத்திருக்க நேரமில்லை - விமரிசனம் பார்த்தேன். அக்குவேறு ஆணி வேறாய்ப் பிய்த்தெடுத்து விட்டீரே! தரமான விமர்சனம். நல்ல வேளை, படம் பார்க்காமல் தப்பித்தோம் சாமீ!

திருச்சி - 8, இ.மா. தமிழ்முகன்.

பரதன் அச்சகத்தில் அச்சிடுபவர் : வி. முரளி. பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிடுபவர்: வி. வைத்தியநாதன். ஆசிரியர் : சீதா ரவி. நிர்வாக ஆசிரியர் : கி. ராஜேந்திரன்.
முகவரி : 47, ஜவாஹர்லால் நேரு சாலை, ஈக்காட்டுதாங்கல், சென்னை - 600 097. தொலைபேசி - ஆசிரியர் குழு அலுவலகம் : 2345624; சர்க்குலேஷன் மானேஜர் : 2345623; விளம்பரம் - சந்தா : 2345622; டைரக்டர் : 2345621.
ஆண்டுச் சந்தா - உள்நாடு : ரூ. 156/-; வெளிநாடு - கப்பல் தபால் : ரூ. 400/-; விமானத் தபால் ரூ. 1050/-.
ஆறு மாதச் சந்தா - உள்நாடு : ரூ. 78/-; வெளிநாடு - கப்பல் தபால் : ரூ. 200/-; விமானத் தபால் ரூ. 525/-.

REGISTERED NO. M. 4392
Registered as Newspaper in Srilanka